## பொருளடக்கம்

**(12)தக்வியதுல் ஈமானில் சுமத்தப்படும் குற்றச்சாட்டும் தக்க மறுப்பும் (நபியைப் போன்று கோடான கோடி பேர்களை அல்லாஹ் உருவாக்குவான்) [பக்கம்:78]**

**(13)அன்வர் ஷாஹ் காஷ்மீரி (ரஹ்) அவர்கள் மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டும் தக்க மறுப்பும் (குர்ஆனில் வார்த்தை ரீதியான மாற்றம் நிகழும்) [பக்கம்:81]**

**(14)ஷாஹ் இஸ்மாயில் ஷஹீத் (ரஹ்) அவர்கள் மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டும் தக்க மறுப்பும் (அனைத்து நபிமார்களும் பயனற்றவர்கள்) [பக்கம்:88]**

**(15)தக்வியதுல் ஈமானில் சுமத்தப்படும் குற்றச்சாட்டும் தக்க மறுப்பும் (நபிமார்களும்,மற்றவர்களும் அறியாமையில் உள்ளார்கள்) [பக்கம்:92]**

## பராஹீனுல் காதிஆவில் சுமத்தும் குற்றச்சாட்டும் அதற்கான மறுப்பும்

தேவ்பந்த் ஆலிம் ஒருவர் எழுதிய "பராஹினே காதியா " புத்தகத்தில்

.நபியவர்களை ( ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ) தேவ்பந்த் ஆலிம் கணவில் கண்டதாகவும் நபியவர்கள் ( ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் ) உருது மொழியை பேசியதாகவும் அதற்க்கு அந்த உலமா யா ரசூலல்லாஹ் ﷺ தங்களுக்கு எப்படி உருது தெரியும்? என கேட்டதற்க்கு தேவ்பந்த்

ஆலிம்களுடன் என்றைக்கு என் தொடர்பு ஏற்பட்டதோ அன்றைக்கே நான் உருது கற்றுக்கொண்டேன் என்றார்கள் (பராஹீனுல் காதிஆ) நமது பதிலடி :. கனவில் கண்ட நிகழ்வாகும்.கனவு என்பது மனிதனின் விருப்பத்தின் பேரில் காண்பதில்லை. இதனால்தான் இஸ்லாத்தில் மூன்று பேர் விஷயத்தில் நன்மை தீமை எதுவும் எழுதப்படுவதில்லை.அதில் கனவும் ஒன்றாகும். அதனால் தான் கனவு கண்டவர் மீது குற்றமில்லை ..இது போன்ற கனவை கண்டது குற்றம் என்றால் பரலேவிகள் பின்வரும் கனவிற்கு பதில் சொல்லுங்கள்! ஒரு முறை அபூஹனீபா (ரஹ்) கனவு கண்டார்கள்.அதில் பெருமனாரின் கப்ரின் அருகில் சென்றார்கள்.பிறகு அதை தோண்டினார்கள்.அதில் உள்ள எலும்புகளை எடுத்து தனது நெஞ்சோடு அணைத்துக்கொண்டார்கள் இதனால் திடுக்கிட்டு விழித்த இமாம் அவர்கள் தனது ஆசிரியரிடத்தில் சென்று கனவை கூறினார்கள்.அதற்கு ஆசிரியர் அவர்கள் விளக்கமளித்தார்கள் நபியின் ஹதீஸ்களை பின்பற்றுவீர்கள் நபியின் மார்க்க கல்வியை

நெஞ்சில் சுமப்பீர்கள் என்றார்கள். (ஆதாரம் ஹைறாதுல் ஹிஸான்) ஆக அபூஹனீபா (ரஹ்) அவர்கள் கனவின் வெளிப்படையை கவனித்து திடுக்கிடுகிறார்கள். கனவின் உண்மையான விளக்கத்தை அறிந்த பிறகுதான் இமாமின் மனது அமைதி பெறுகிறது.மேலும் கனவின் விளக்கம் சொல்வது என்பது அதில் தேர்ச்சி பெற்றவர்களால் சரியான விளக்கத்தை கூறமுடியும்.பராஹீனுல் காதிஆ என்ற நூலின் கனவிற்கு விளக்கம் என்னவெனில் அறிஞர்கள் கூறுகிறார்கள் தாரூல் உலூம் நிறுவிய பிறகுதான் அண்ணலாரின் ஹதீஸ்கள் உர்து மொழியில் பரவியது.தேவ்பந்த் உலமாக்களின் பிரசகங்கள் மூலமாகவும்,புத்தகங்கள் எழுதுவதன் மூலமாகவும் பாடங்களை நடத்துவதன் மூலமாகவும் உர்து மொழியில் சேவை செய்வார்கள் இந்த கனவின் விளக்கமும் இன்றைய தேவ்பந்த் மதரஸாவினால் ஏற்பட்ட மார்க்க விழிப்புணர்வை பறைசாற்றுகிறது. வரலாறும் அதனை நிரூபிக்கிறது. பராஹீனுல் காதிஆவின் மீது குற்றம் சுமத்தும் பரலேவிகள் ஹைறாதுல் ஹிஸானிற்கு

எதிராகவும் இமாம் அபூஹனீபா ரஹ் எதிராகவும் குற்றம் சுமத்துவார்களா?

கனவை முன்வைத்து தேவ்பந்த் உலமாக்கள் மீது குற்றம் சுமத்தும் பரலேவிகள் பின்வரும் கனவிற்கு பதிலளியுங்கள்! ரிளாகான் பரலேவி அவர்கள் அவரது மல்பூஜாதில் இரண்டாவது பாகத்தில் குறிப்பிட்டுள்ளார் மௌலவி பராகத் அஹ்மது ஸாஹிப் மரணமான போது மௌலவி ஸய்யித் அமீர் அஹ்மது ( ரஹ்) அவர்களின் கனவிலே நபி (ஸல்) அவர்களை சந்தித்தார்கள் நபி ஸல் அவர்கள் குதிரையில் வந்து கொண்டிருந்தார்கள். எங்கிருந்து வருகிறீர்கள்? என்று நபியிடத்தில் ஸய்யித் அமீர் அஹ்மது அவர்கள் கேட்டார்கள் அதற்கு நபி ( ஸல்)அவர்கள் கூறினார்கள் பரகாத் அஹ்மத் அவர்களின் ஜனாஜா தொழுகையில் கலந்து கொண்டு சென்று கொண்டு இருக்கிறேன் என்றார்கள் ரிளாகான் பரலேவி குறிப்பிடுகிறார்கள் அல்ஹம்துலில்லாஹ்! இந்த ஜனாஜாவிற்கு நான் தான் தொழவைத்தேன் ஆதாரம் ( மல்பூஜாத் இரண்டாவது பாகம்) பராகினுல் காதிஆவில் சொல்லப்பட்ட கனவோ முழுவதும் கனவாகும்.ஆனால் ரிளாகான் எழுதிய

கனவிலோ நபியின் சந்திப்பது கனவானது ஆனால் ரிளாகான் ஜனாஜா தொழவைத்தது விழிப்பு நிலையிலாகும்.இதில் பெருமையுடன் அல்ஹம்துலில்லாஹ் வேறு நபி ஸல் அவர்கள் " முக்ததி" ரிளாகான் பரலேவி "இமாம்" இது நபியின் மீது அவமரியாதை இல்லையா?

பதாவா ரஷீதிய்யாவில் சுமத்தப்படும் குற்றச்சாட்டும் அதற்கான மறுப்பும் பதாவா ரஷீதிய்யாவில் பரலேவிகளால் எழுப்பப்படும் குற்றச்சாட்டு எந்த நபர் ஸஹாபாக்களை தக்ஃபீர் செய்வாரோ அவர் சபிக்கப்பட்டவராவார்.அவர் மஸ்ஜிதில் இமாமத் செய்வது ஹராமாகும்.இந்த பெரும் பாவத்தின் காரணமாக அஹ்லுஸ்ஸுன்னாவை விட்டு வெளியேறமாட்டார்.(பதாவா ரஷீதிய்யா 128) இதனை வைத்து கொண்டு பரலேவிகளால் எழுப்பப்படும் வாதமானது நபித்தோழர்களை காபிர் என்பதாக கூறுபவர்கள் அஹ்லுஸ்ஸுன்னாவை விட்டும் வெளியேறமாட்டார்கள் என்பதன் மூலம் தேவ்பந்திகள் ஸஹாபாக்களின் விஷயத்தில் அவமரியாதையாக நடந்து கொள்கிறார்கள்

நமது பதிலடி இதற்கு சரியான பதிலை இனி காண்போம்! இது எழுத்தாளரின் தவற்றால் நிகழ்ந்தது.இது தவறுதலாக எழுதப்பட்டது என்பதற்கு சரியான தெளிவான சான்றுகள் உண்டு.1)அசல் வார்த்தையானது இந்த இடத்தில் அஹ்லுஸ்ஸுன்னாவை விட்டும் வெளியேறமாட்டார் என்று இருந்தால் இறுதியான வார்த்தையின் ஆரம்பத்தில் استدراك (ஆனால்)என்ற வார்த்தையானது வந்திருக்க வேண்டும். அதாவது இவ்விதமாக لیکن وہ اپنے کہے کے سبب اہل سنت سے نہ خارج ہوکا ஆனால் அவ்வாறு வரவில்லை.2) அதே பத்வாவில் சபிக்கப்பட்டவர் என்று உள்ளது.3)அதே பத்வாவில் இமாமாக ஆக்குவது ஹராம் என்று சொல்லப்பட்டுள்ளது. அஹ்லே சுன்னாவாக இருந்திருந்தால் சபிக்கப்பட்டவர்,ஹராம் என்று சொல்லி இருக்ககூடாது.எனவே இது எழுத்தாளரின் தவறினால் ஏற்பட்டது என்பதை தெளிவாக அறியமுடிகிறது.அதே "பதாவா ரஷீதிய்யாவில்" மற்றோர் இடத்தில் ராபிளியாக்களை அதிகமான உலமாக்கள் காபிர் என்கின்றனர். எனவே அவர்களைப் பின்பற்றி தொழுவது கூடாது.(பதாவா

ரஷீதிய்யா 234) மற்றொரு பத்வா ஸஹாபாக்களை காபிர் என்பவர் அஹ்லுஸ்ஸுன்னாவிலிருந்து நீங்கிவிட்டார்.குர்ஆனை மறுப்பவராகிவிடுகிறார். ( த:லீ:பாது ரஷீதிய்யா ஹிதாயத்துஸ்ஷீஆ 596) ஒரு தடவை மௌலவி முஹம்மது ஹஸன் அவர்கள் ரவாபிள்களின் தக்:பீரைப் பற்றி ரஷீத் அஹ்மது கங்கோஹி ரஹ் அவர்களிடத்தில் கேட்டார்கள் அதற்கு நம்முடைய ஆசிரியர் ஷாஹ் அப்துல் அஜீஜ் அவர்களின் கருத்தின் படி காபிர்களுக்கு சமம் சிலர் அஹ்லுல் கிதாபிற்கு சமம் என்கின்றனர்.சிலர் முர்தத் என்கின்றனர் என்பதாக பதில் அளித்தார்கள்.தங்களின் கருத்து என்ன? என்பதாக கேட்டார்.ராபிளியாக்களின் உலமாக்கள் கா:பிர் அறியாதவர்கள் பாவிகள் (தத்கிரதுர் ரஷீத் 2/284)ஆக ஸஹாபாக்களை அவமரியாதை செய்பவரை பிறகு எப்படி அஹ்லுஸ்ஸுன்னாவிலிருந்து வெளியேறியவர் அல்ல என்று சொல்லியிருப்பார்கள்? இதன் படி குற்றச்சாட்டு சுமத்துபவர்கள் குர்ஆனில் அச்சுப்பிழை

ஏற்பட்டால் அல்லாஹ்றவின் தவறு என்பார்களா? அல்லாஹ் பாதுகாப்பானாக!

அஷ்ரப் அலி தானவி ரஹ் மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டும் அதற்கான பதிலும் அஷ்ரப் அலி தானவி ( ரஹ்) அவர்கள் ஆயிஷா ரளி அவர்களை அவமரியாதை செய்தார்கள் என்று சில பரலேவிகள் அஷ்ரப் அலி தானவி ரஹ் அவர்கள் மீது சுமத்துகிற குற்றச்சாட்டு அன்னார் கட்டுரையில் ஆயிஷா ரளி அவர்களை கனவில் கண்டால் நல்ல மனைவியை மணப்பது அதற்குரிய விளக்கமாக எழுதியுள்ளார்கள்.இது ஆயிஷா (ரளி) மீது தெளிவான அவமரியாதையாகும். எவரேனும் தாயை பார்த்து பெண்ணிற்கு விளக்கமாக கூறுவார்களா? பரலேவிய மௌலவி உமர் அலி குறிப்பிட்டுள்ளார் தாயை மனைவிக்கு விளக்கமாக சொல்வது மிகவும் இழிவுப்படுத்துவதாகும். அவரின் ஈமானின் நிலையை சிந்திக்கட்டும்! (مقیاس حنفیت)

நமது பதிலடி அஷ்ரப் அலி தானவி (ரஹ்)மீது சுமத்தப்படும் இந்த குற்றச்சாட்டானது கனவிற்கு சொல்லப்படும் விளக்கத்தை முற்றிலும் அறியாததாலும் தேவ்பந்த் உலமாக்களின் மீதுள்ள

காழ்ப்புணர்ச்சியுமாகும்.சில சமயங்களில் சில கனவுகள் வெளிப்படையில் திடுக்கம் நிறைந்ததாகவும்,அபாயகரமானதாகவும் இருக்கும் ஆனால் உண்மையில் அதனின் விளக்கம் நல்லதாக இருக்கும்.சில சமயங்களில் சில கனவுகள் வெளிப்படையில் நல்லதாக தெரியலாம்.ஆனால் அதன் விளக்கமானது கெட்டதாக அமைந்து விடலாம்.இதனால் கனவை அதனின் வெளிப்படையான நிலையுடன் ஒப்பிட்டுப்பார்ப்பது மிகப்பெரிய அறியாமையும், அறிவீனமாகும்.அஷ்ரப் அலி தானவி ( ரஹ்)அந்த கனவிற்கு கொடுத்த விளக்கமானது முற்றிலும் சரியானது.கனவிற்கு சொல்லப்பட்ட விளக்கமும் பொருத்தமானது.ஷைக் அப்துல் கனி நாபிலிஸி ( ரஹ்) கனவிற்கு விளக்கம் சம்பந்தமான ஒரு நூல் “تعطير الانام فى تعبير المنام” என்ற நூலை எழுதியுள்ளார்கள்.அதில் வரும் வாசகம் و من رأى رجل احدا من ازواج النبي صلى الله و كان اعزب تزوج امرأة صالحة எவரேனும் ஒருவர் கனவிலே நபி ஸல் அவர்களின் மனைவிமார்களில் எவரையாவது பார்த்தால் அவர் திருமணம் முடிக்காதவராக இருக்கிறார் . அதற்குரிய

விளக்கமானது அவர் நல்ல பெண்ணை மணம்புரிவார். அல்லாஹ் மிகப்பெரியவன் பரலேவிய மௌலவி உமர் அலி அவர்கள் அப்துல் கனி ரஹ் அவர்களுக்கு எதிராக தீர்ப்பு கொடுக்க தாயாரா? ஆயிஷா ரளி அவர்களை மட்டும் கனவில் கண்டதை சொல்லவில்லை மாறாக நபியின் அனைத்து மனைவிமார்களின் விஷயத்தில் எழுதியுள்ளார்

**ஷர்பராஜ் கான் ச ஃப்தர் அவர்கள் மீது சுமத்தும் குற்றச்சாட்டும் அதற்கான நமது மறுப்பும்** ஷரஹ் ஷபாவில் سرفراز خان صفدر (ரஹ்)மோசடி செய்துள்ளார்களா? பரலேவிகள், ஹள்ரத் இமாம் அஹ்லுஸ்ஸுன்னா பித்அத்துகளை களையெடுப்பவராக திகழ்ந்த "ஸர்பராஸ் கான் ஸப்தர்" (ரஹ்) அவர்கள் மீது சுமத்தும் குற்றச்சாட்டும் அதற்கு பதிலும்: அல்லாமா முல்லா அலி காரி (ரஹ்) அவர்கள் காளி இயாள் ( ரஹ்) அவர்களின் " ஷரஹ் ஷிபாவில்" உள்ள வாக்கியத்திற்கு விளக்கம் கொடுக்கிறார்கள் அதில் அல்லாமா முல்லா அலி காரி ( ரஹ்)அவர்களின் அசலான

வாக்கியமானது لان روحه صلى الله حاضرة فى بيوت اهل الاسلام ஏனெனில் நபி (ஸல்) அவர்களின் உயிரானது இஸ்லாமியர்களின் வீடுகளிலே விஜயம் செய்கிறது.இவ்வாறு உள்ள இந்த வாசகத்தின் ஆரம்பத்தில் لا ( இல்லை) என்ற இணைத்து மோசடி செய்துள்ளார்கள். لا لان روحه حاضرة فى بيوت اهل الاسلام நபி ஸல் அவர்களின் உயிரானது இஸ்லாமியர்களின் வீடுகளிலே விஜயம் செய்வதில்லை. தெளிவான பதில்: அல்ஹம்துலில்லாஹ்! தேவ்பந்த் உலமாக்கள் அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாத் கொள்கைகளை குர்ஆன்,சுன்னா மற்றும் ஸஹாபாக்களின் நிலைப்பாடுகள் என தெளிவான ஆதாரங்களின் மூலம் நிரூபித்துள்ளார்கள்.எந்த ஒரு வாக்கியத்திலும் மோசடி செய்ய வேண்டிய தேவை சத்திய உலமாக்களுக்கு ஒரு போதும் கிடையாது.மோசடி என்பது பரலேவிகளின் ஊறிப்போன பழக்கமாகும்.இன்ஷா அல்லாஹ் அதனை பிறகு நிரூபிப்போம்! மௌலானா ஸர்பராஸ் சப்தர் ( ரஹ்) அவர்கள் தனது நூலான ஆன்கோ கி டன்டக் ٹھنڈک انکھوں( எழுதியுள்ளார்கள் அதில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் சில பிரதிகளில் لا (இல்லை)

என்ற வார்தையானது விடுப்பட்டுள்ளது.இதனை ஹள்ரத் போகிற போக்கில் கூறவில்லை மாறாக தெளிவான ஆதாரங்களின் மூலம் நிரூபித்துள்ளார்கள்.

நபி ( ஸல்)அவர்களின் உயிரானது இஸ்லாமியர்களின் வீடுகளிலே விஜயம் செய்யும் என்ற வாசகத்தின் மூலம் சிலர் ஏமாந்து விட்டனர்.ஆனால் இது எதார்த்திற்கு எதிரானது. முஹத்திஸ் ஜலீல் ஷைகுல் ஹதீஸ் மதரஸா மஜாஹிருல் உலூம் ஸஹாரான்பூர் ஹள்ரத் மௌலானா யஹ்யா ஸாஹிப் காந்தலவி (ரஹ்) அவர்களின் சிறிய கட்டுரையில் "علم غيب رسول" ன் மூன்றாம் பக்கத்தில் ( ஹள்ரத் மௌலானா ரஷீத் அஹ்மது கங்கோஹி ரஹ் அவர்களும் உண்மைப்படுத்தியுள்ளார்கள்)ஷரஹ் ஷபாவின் சில பிரதிகளில் புத்தகத்தின் பதிப்பகத்தாரின் தவற்றின் காரணமாக لا ( இல்லை) என்பது விடுபட்டுவிட்டது ஷரஹ் ஷபா மற்றும் சரியான கையெழுத்து பிரதியிலும் அச்சிடப்பட்ட பிரதியிலும் இந்த விஷயமானது தெளிவாகிறது.அவரின் வேறு நூல்களின் மூலமும் உறுதிப்படுத்தப்படுகிறது. இதன் மூலம் நமக்கு விளங்குகிறது.மௌலானா

அவர்கள் கையெழுத்து மற்றும் அச்சுப் பிரதிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து வாதிடுகிறார்கள்.எனவே நாமும் அவரின் ஆய்வின் மீது நம்பிக்கை கொள்கிறோம். ملا علی قاری) اور مسئلہ علم غیب و حاضر و ناظر மௌலானா ஸர்பராஸ் ஸப்தர் ( ரஹ்)அவர்கள் யூகத்தின் பேரில் சொல்லவில்லை மாறாக தெளிவான ஆதாரத்தின் மூலம் நிறுவியுள்ளார்கள். அல்லாமா முல்லா அலி காரி (ரஹ்)அவர்களின் நூலான الدرة المضيئة فى الزيارة المصطفوية அதில் எழுதியுள்ளார்கள் நபி ( ஸல்) அவர்களை ஜியாரத் செய்வதில் மிகப்பெரிய நன்மையானது ஜியாரத் செய்பவர் நபியின் கப்ருக்கு அருகில் நின்று கொண்டு நபி (ஸல்) அவர்கள் மீது ஸலாமும் ஸலவாத்தும் சொன்னால் அதனை நபியவர்கள் வெளிப்படையில் செவிமடுப்பார்கள்.எவரின் உதவியின்றி ( மலக்குமார்களின்) ஸலாம் சொல்வார்கள்.இதற்கு மாற்றமாக நபியை விட்டு தூரமாக இருந்து ஸலாம் கூறினால் ஸலவாத் ஓதினால் ( மலக்கின்) உதவியின்றி அடையாது.ஸஹீஹான ஹதீஸில் வந்துள்ளது யார் என் கப்ருக்கு அருகில் நின்று கொண்டு ஸலாம் சொல்வாரோ நான் அதனை

செவிமடுக்கிறேன்.யார் தூரமாக ஸலாம் சொல்வாரோ ( ஸலாமானது) எத்திவைக்கப்படும்.

இதன் மூலம் முல்லா அலிகாரி ரஹ் அவர்களின் தெளிவான வாசகத்தின் மூலம் நபி ஸல் அவர்கள் ஹாளிர்,நாளிர் கொள்கையை முற்றிலும் மறுத்துள்ளார் என்பதை விளங்கமுடிகிறது. ஹள்ரத் ஸர்பராஜ் ( ரஹ்) அவர்கள் மோசடி செய்யவில்லை என்பதாக நிரூபித்துள்ளோம் பரலேவிய அறிஞரின் மோசடி علامة قسطلانی (ரஹ்) அவர்கள் புகாரியின் விளக்கவுரையில் நபிக்கு மறைவான ஞானம் சம்பந்தமாக நீண்ட ஆய்வு செய்துள்ளார்கள்.அதில் நமக்கு தேவையான சுருக்கமான விஷயம் بان بعض من لم يرسخ الايمان كان يظن ذلك حتى كان يري ان صحة النبوة تستلزم اطلاع النبي صلى الله عليه على جميع المغيبات இதனின் கருத்தாவது: அனைத்து மறைவான விஷயங்களையும் நபி (ஸல்) அவர்கள் அறிந்திருப்பதானது அவரின் நுபுவ்வத் சரியானது என்பதை அவசியமாக்குகிறது என்பதாக ஈமான் சரியில்லாத (நயவஞ்சகர்கள்) கருதுகிறார்கள். இதன் மூலம் நபி ( ஸல்) அவர்களுக்கு மறைவான ஞானம் இல்லை என்பது நமக்கு

தெளிவாகிறது. அது மட்டுமின்றி மறைவான ஞானம் நபிக்கு இருப்பதாக முனாபிக்குகள் தான் கருதுகிறார்கள்.இந்த கருத்தானது பரலேவிய கொள்கைகளுக்கு எதிராகவும் முனாபிகுகளின் கொள்கைகளுக்கு ஒத்து இருப்பதனாலும் பரலேவிய அறிஞர் உமர் மிகப்பெரிய மோசடி செய்துள்ளார்கள்.மேலுள்ள வாசகத்தில் இருட்டடிப்பை செய்து தங்களின் கொள்கைக்கு சாதகமாக மாற்றிவிட்டார் ان صحة النبوة تستلزم اطلاع النبي صلى الله عليه و سلم على جميع المغيبات அனைத்து மறைவான விஷயங்களையும் நபி அறிந்திருப்பதானது அவரின் நுபுவ்வத் சரியானது என்பதை அவசியமாக்கிறது. என்பதாக குறிப்பிட்டுள்ளார் ஆனால் உண்மையில் இவ்வாறு சொல்வது முனாபிக்குகள் அதனை சொல்லாமல் மறைத்துவிட்டு மோசடி செய்துள்ளார் இந்த லட்சணத்தில் பரலேவிகள் சத்திய உலமாக்களான தேவ்பந்த் உலமாக்களின் மீது அவதூறை அள்ளிவீசுவது மிகப்பெரிய அநியாயம் ان الله لا يهدى القوم الظالمين

மௌலானா அஷ்ரப் அலி தானவி ரஹ் அவர்களின் மல்பூஜாத்திலே பரலேவிகளால் சுமத்தப்படும் குற்றச்சாட்டும் அதற்கு தகுந்த

மறுப்பும்: நபி (ஸல்) அவர்களின் உருவத்திலே ஷைத்தான் கனவில் வரமாட்டான் என்பது சம்பந்தமாக கேள்வி கேட்கப்பட்டது. ஸஹாபாக்களிலே எவரையேனும் கனவில் பார்த்தால் உதாரணமாக அபூபகர் ( ரளி) அன்ஹு உமர் ரளி அன்ஹு இவர்களின் உருவத்திலே ஷைத்தான் வரமுடியுமா? இதற்கு பதிலளித்தார்கள் பிரபல்யமான சொல்லின்படி நபிமார்களை தவிர கனவில் அனைவரின் உருவத்திலும் ஷைத்தான் வரமுடியும். இதனை முன்வைத்து பரலேவிகள் எழுப்புகிற குற்றச்சாட்டு அஷ்ரப் அலி தானவி அவர்கள் ஸஹாபாக்களுக்கு அவமரியாதை ஏற்படுத்தியுள்ளார். நமது மறுப்பு: முதலில் நாம் ஒரு விஷயத்தை கவனம் வைக்கவேண்டும்! பெரியோர்களின் மல்பூஜாத்தை முன்வைத்து விமர்சிப்பதானது பரலேவிய பெரியோர்களிடத்தில் ஏற்கப்படாது.இதனை நாம் சுயமாக சொல்லவில்லை.பரலேவிய அறிஞர் நூலில் குறிப்பிட்டுள்ளார்: பெரியோர்களின் மல்பூஜாதிலே சில விஷயங்கள் அவர்களின் பக்கம் தவறுதலாக இணைக்கப்பட்டுவிடுகிறது.இதற்கு

சாத்தியமும் உள்ளது.அசலான சம்பவம் ஒன்றாக இருக்கும்.எடுத்து சொல்பவரிடம் தவறு ஏற்பட்டுவிடலாம்.இது எவ்வாறெனில் ஹதீஸில் உள்ள அறிவிப்பாளர்கள் பலமாக இருப்பதுடன் சில சமயங்களில் ஹதீஸானது பலகீனமாக கருதப்படும்.( عبارات اکابر کا تحقیقی و تنقیدی جائزہ ) மற்றொரு பரலேவிய அறிஞர் குறிப்பிட்டுள்ளார் மல்பூஜாத்தை முன்வைத்து அதற்குரியவரை குறை சொல்ல கூடாது.மல்பூஜாத்தானது வரலாற்று ரீதியாகவும்,எதார்த்தத்திலும் ஏற்கத்தக்கதல்ல.எனவே மல்பூஜாத்தை முன்வைத்து அல்லாஹ்வின் நேசர்களை எந்த குறையும் சொல்லப்படாது.( روئداد اکابر تحقیقی و تنقیدی جائزہ حصہ اول) (முக்கிய குறிப்பு:பரலேவிகள் தேவ்பந்த் உலமாக்களின் மல்பூஜாதில் விமர்சனங்களை வைப்பார்கள்.எனவே பரலேவிகளுக்கு எதிராக பல்வேறு விஷயங்களில் மேற்சொன்ன பரலேவிகளின் பெரியோர்களின் நிலைப்பாட்டை எடுத்து வைத்து அவர்களின் வாதங்களை முறியடிக்கலாம்.)

பரலேவிகளின் முன்னோர்களிடம் மல்பூஜாதானது ஏற்கத்தக்கதல்ல எனும் போது அஷ்ரப் அலி தானவி ( ரஹ்) அவர்களின்

மல்பூஜாத்தை மட்டும் விமர்சிப்பதானது காழ்ப்புணர்ச்சியே தவிர வேறு எதுவாக இருக்க முடியும்? அஷ்ரப் அலி தானவி (ரஹ்) மீது எவ்வளவு பெரிய அபாண்டத்தை சுமத்துகிறார்கள்! பரலேவிகளுக்கு கொஞ்சம் கூட வெட்கமில்லையா? அடுத்து அஷ்ரப் அலி தானவி ( ரஹ்)அவர்களைப் பற்றி பரலேவிய வழிமுறையைச் சேர்ந்த அறிஞர் மௌலவி ஃபைஜ் அஹ்மத் ஸாஹிப் எழுதியுள்ளார்: மௌலவி தானவி ஸாஹிப் முற்றிலும் மார்க்க ரீதியான கண்ணோட்டத்தில் நுணுக்கமாக அணுகுவது பொதுவான வழக்கமாகும்.( مهر منير ) இந்த ஆதாரத்தின் மூலம் நாம் அறிய முடிகிறது.ஹள்ரத் மல்பூஜாதிலே கூறியது முற்றிலும் ஷரீஅத்தி ரீதியான கண்ணோட்டத்தில் நுணுக்கமான முறையில் அணுகியுள்ளார்கள். பரலேவிகள் இதற்கு மாற்றமாக வாதத்தை முன்வைத்து ஷரீஅத்திற்கு மாற்றம் செய்ய விரும்புகிறார்களா? அவ்வாறு இல்லையெனில் அவர்களின் வழிமுறையைச் சேர்ந்த மௌலவி ஃ பைஜ் அஹ்மத் ஸாஹிப் பொய்யர் என்பதாக ஏற்கவேண்டும் தயாரா?

அஷ்ரப் அலி தானவி (ரஹ்) எழுதியுள்ளார்கள்: பிரபல்யமான சொல் என்னவெனில் ஷைத்தான் கனவிலே நபிமார்களை தவிர அனைத்து உருவங்களிலும் வரமுடியும். அடுத்து பரலேவிய உலமாக்கள் இதற்கு எதிரான தெளிவான ஆதாரங்களை முன்வைத்து தானவி ( ரஹ்) அவர்கள் சொன்னது தவறு என்பதை நிரூபிக்க முடியுமா? கியாமத் நாள் வரை அவகாசம் தருகிறோம்! அஷ்ரப் அலி தானவி ( ரஹ்) சொன்ன கருத்தானது சரியானது என்பதற்கு அடுக்கடுக்கான ஆதாரங்கள்: ஹாபிள் இப்னுல் ஹஜர் ( ரஹ்) கூறுகிறார்கள்: ஷைத்தான் எவரின் உருவத்தில் உருவெடுத்து கனவில் வருவதற்கு விரும்புகிறானோ அவனால் முடியும்.இதற்கு அல்லாஹ் ஆற்றல் கொடுத்துள்ளான்.ஆனால் நபி ஸல் அவர்களின் உருவத்திலோ, வடிவத்திலோ வரமுடியாது.(فتح البارى باب كتاب التعبير) முல்லா அலி காரி (ரஹ்) கூறுகிறார்கள்: அல்லாஹ் நபிக்கு தனிச்சிறப்பை கொடுத்துள்ளான்.நபி ( ஸல்) அவர்களை பார்ப்பதானது சரியாக இருக்கும்.ஷைத்தானுக்கு நபி ( ஸல்) அவர்களின் உருவத்தில் வருவதானது

தடுக்கப்பட்டுள்ளது.(مشكوة شريف) ஷைகு அப்துல் ஹக் முஹத்திஸ் தெஹ்லவி ( ரஹ்) சில அறிஞர்கள் ஆய்வுடன் எழுதியுள்ளார்கள்: ஷைத்தான் கனவிலே சில நபர்களிடத்தில் வந்து ஏமாற்ற முடியும்.நான் அல்லாஹ் என்பதாக ஆனால் நபியின் உருவத்தில் எப்பொழுதும் வரமுடியாது.(اشعة اللمعات كتاب الرويا ) இந்த அனைத்திலும் எதிர்மறைப் பொருள் (مفهوم مخالف) கொள்வதின் மூலம் இவ்வாறு கூறமுடியும்.நபி ( ஸல்) அவர்களின் உருவத்திலே ஷைத்தான் உருவம் எடுக்க மாட்டான்.அது அல்லாமல் ஒவ்வொருவரின் உருவத்திலும் கனவில் வரமுடியும். எதிர்மறை பொருள் கொள்வது சம்பந்தமான பாளில் பரலேவி ரிளாகானின் பத்வா: ஸஹாபாக்கள் மற்றும் அவர்களுக்கு பிறகு உள்ள அறிஞர்களின் கூற்றிலே எதிர்மறை பொருள் கொள்வதானது கவனிக்கப்படும்.( فتاوى رضويه) பரலேவிய மௌலவி ஃ பைஜ் அஹ்மத் உவைஸி ஸாஹிப் ஷைத்தான் எந்த நபியின் உருவத்தையும் தேர்ந்தெடுக்க முடியாது.மவாகிப் லதுன்யாவல் எழுதப்பட்டுள்ளது இது நபியின் தனிச்சிறப்பம்சங்களில் உள்ளது.

மாறாக ஃபைஜ் அஹ்மது உவைஸி இன்னும் ஒரு படி மேலே எழுதியுள்ளார் உலமாக்கள் இதனை நபி ( ஸல்) அவர்களின் தனிச்சிறப்புகளிலே உள்ளது.நபி ( ஸல்) அவர்களைத் தவிர மற்ற எந்த ஒரு நபருக்கும் இந்த தனிச்சிறப்பு கிடையாது.நபி ( ஸல்) அவர்களை தவிர பெரும் பெரும் நபர்களின் உருவத்தை ஷைத்தான் தேர்ந்தெடுக்க முடியும்.(زائرین سرکار مدینہ) இந்த வாக்கியங்களை மீண்டும் மீண்டும் கவனித்துப் பாருங்கள்! தானவி ( ரஹ்) மல்பூஜாத்தில் கூறியதற்கும் பரலேவிய அறிஞர் கூறியதற்கும் என்ன வித்தியாசம் உள்ளது? பரலேவிகள் நீதம் மற்றும் மார்க்கத்தின் அடிப்படைகளை செயல்படுத்தியவாறு அந்த அறிஞருக்கு எதிராக பத்வா கொடுக்க தயாரா? அஹ்மது ரிளாகான் பத்வா: நபி ( ஸல்) அவர்களின் உருவத்தில் ஷைத்தான் உருவம் மாற முடியாது.நல்லோர்களின் உருவத்திலே வந்து ஏமாற்றம் முடியும்.இதற்கும் மேலாக தன்னைத்தானே இறைவன் என்பதாக வெளிப்படுத்த முடியும்.(فتاوی رضوی) அடுத்து இது சம்பந்தமாக பரலேவிகளின் வாதங்களும் அதற்கான மறுப்பும்: கன்ஜூல் உம்மாலின்

அறிவிப்பில் வருகிறது من رآني فى المنام فقد رآني فان الشيطان لا يتمثل بي ومن رآى ابابكر الصديق فقد رآه இந்த ஹதீஸின் மூலம் கனவில் அபூபகர் ( ரளி) அவர்களை பார்த்தவர் அவரைதான் பார்த்தார் என வந்துள்ளது.நமது பதில்: “கன்ஜுல் உம்மாலில்” உள்ள ஹதீஸானது அறிவிப்பாளர் தொடர் அறவே இல்லை.பரலேவிகளுக்கு அவர்களின் பெரியோர்களின் கூற்றுகளுக்கு மட்டும் உறுதியான ஆதாரம் தேவை மற்றவர்களை விமர்சிக்கும் போது மட்டும் இது போன்ற அறிவிப்பாளர் தொடரில்லாதவை ஆதாரமா? அல்லாஹ்வின் பயமில்லையா? கொஞ்சமாவது வெட்கப்படுங்கள்! மற்றொரு ரிவாயத்தை எடுத்து வாதிடுகிறார்கள்.அந்த அறிவிப்பின் கருத்து கஃபாவின் தோற்றத்தில் வரமுடியாது என உள்ளது.நமது பதில்: இந்த அறிவிப்பானது ஆதாரப்பூர்வமானது அல்ல.

அடுத்த வாதம் “فتاوى رضوية” நல்லோர்களின் உருவத்திலே வரமுடியும் என்றுதான் உள்ளது.உண்மையாளர்கள் என்பதாக இல்லை.மேலும் பதாவா “ரிஜவிய்யாவிலே” ஷைத்தான் தனது நாவின் மூலம் அல்லாஹ் என்பதாக வாதிடுவான் என்பதாகதான்

உள்ளது.ஆனால் அல்லாஹ்வின் உருவத்திலே வரமுடியும் என்பது தேவ்பந்தியர்களின் பொய்யாகும். நமது பதில்: நபி ஸல் அவர்களை தவிர நல்லோர்களின் உருவத்திலே வரமுடியும் என்பதாக தான் பரலேவிகளின் அஃலா ஹள்ரத் கூறியுள்ளார் பரலேவிகளிடத்தில் ஸஹாபாக்கள் நல்லோர்கள் இல்லையா? ரிளாகானின் பதாவாவை நன்றாக கவனியுங்கள்! பொய் சொல்வது சத்திய உலமாக்களான தேவ்பந்தியினரா? அல்லது பரலேவியினரா? என்பதானது இதன் மூலம் விளங்க முடியும்.ரிளாகான் தெளிவாக எழுதியுள்ளார் خود الہ ظاہر سکتاہے ஷைத்தான் அல்லாஹ்வாக கனவில் வெளிப்படமுடியும்.

ஷாஹ் இஸ்மாயில் ஷஹீத் ( ரஹ்) மீது இஸ்லாத்தின் எதிரிகளும்,ஓரிறைக் கொள்கை,சுன்னத்திற்கு எதிரான விரோதிகள் சுமத்தும் குற்றச்சாட்டு மறுப்பு: பரலேவிய மௌலவி நயீமுத்தீன் ஸாஹிப் அவரின் நூலில் (اطیب البیان رد تقویۃ الایمان) இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் தக்வியதுல் ஈமானின் ஆசிரியர் அனைத்து நபிமார்களின் சிபாரிசை மறுக்கிறார்.நபிமார்களின் சிபாரிசானது

பிரயோஜனமற்றது என்கிறார். இதன் பிறகு பரலேவிய மௌலவி மேலும் குறிப்பிடுகிறார் இதனை ஷாஹ் இஸ்மாயில் முஃதஜிலாக்களிடம் கற்றுக்கொண்டார். அதுமட்டுமின்றி அவர்களை விட வழிகேட்டில் முன்னேறி விட்டார்.முஃதஜிலாக்கள் கூட ,குற்றம் மன்னிக்கப்படுவதற்குரிய ஷஃபாஅத்தை மறுத்தனர். அதே சமயத்தில் ஒருவரின் அந்தஸ்துகளை உயர்த்துவதற்கு செய்யப்படும் ஷபாஅத்தை ஏற்கின்றார்கள்.இதனை கூட பொறுத்துக் கொள்ள முடியாமல் முற்றிலும் நபிமார்களின் ஷஃபாஅத்தை மறுக்கின்றார் அதனை கூடும் என்பதற்கும் எந்த ஒரு வழியையும் விட்டுவைக்கவில்லை.(اطيب البلان) பிறகு அவரின் நூலின் 19 பக்கத்தில் ஷபாஅத்தின் மஸ்அலாவானது உறுதியான ஆயத்துகளின் மூலம் எண்ணற்ற ஹதீஸ்களிலும் வந்துள்ளது.அனைத்து ஹதீஸ்கலை அறிஞர்களும் இது சம்பந்தமான அறிவிப்புகளை அறிவித்துள்ளார்கள். முஃதஜிலா வழி கெட்ட கொள்கையினர் கூட ஷபாஅத்தை மறுக்கின்றனர்.அவர்களின் நம்பிக்கை கூட முஃமீன்களின் அந்தஸ்தை

உயர்த்த ஷபாஅத் உண்டு என்கின்றனர். வஹ்ஹாபிகள் ஷபாஅத்தின் விஷயத்திலே (முஃதஜிலா) மாணவர்கள் ஆசிரியர்களை விட முன்னேறி ஷபாஅத்தை முற்றிலும் மறுத்துவிட்டனர்.(اطيب البلن) இனி இதற்கு தெளிவான மறுப்பை பார்ப்போம்! ஹள்ரத் இஸ்மாயில் ஷஹீத் ( ரஹ்) "தக்வியதுல் ஈமானின்" மூன்றாம் பிரிவில் ஷபாஅத்தைப் பற்றி தெளிவாகவும் விரிவாகவும் பேசுகிறார்.நாம் தக்வியதுல் ஈமானில் உள்ள விளக்கத்தை முன்வைக்கிறோம்.அதன் மூலம் பரலேவிகள் எவ்வளவு பெரிய அபாண்டத்தை சுமத்துகிறார்கள் என்பதானது அப்பட்டமாக விளங்கி கொள்ளலாம்!

தக்வியதுல் ஈமானில் சூரா ஸபாவின் ஒரு வசனம் و لا تنفع الشفاعة عنده الا لمن اذن له கருத்து: எவருக்கு அனுமதி அளித்தானோ அவரை தவிர அவனிடத்தில் சிபாரிசு பலனளிக்காது. இதன் பிறகு ஷபாஅத்தின் வகைகளை விவரிக்கிறார்.அதில் முதல் வகை: அதிகமான மக்கள் நபிமார்கள்,நல்லோரின் ஷபாஅத்தின் விஷயத்தில் மறதியில் உள்ளனர்.அதனின் நோக்கத்தை தவறாக விளங்கி அல்லாஹ்வை மறந்துவிட்டனர். ஷபாஅத்தின் உண்மை

நிலையை விளங்கி கொள்ளவேண்டும். ஷபாஅத் என்றால் " சிபாரிசு" என்று சொல்லப்படும்.சிபாரிசு என்பது உலகில் பலவிதங்களில் உள்ளது.உதாரணமாக அரசரிடத்தில் ஏதேனும் ஒரு நபர் திருடர் என்பது நிரூபணமாகிவிட்டது. ஏதேனும் தலைவரோ அல்லது மந்திரியோ அவனை காப்பாற்றுவதற்கு சிபாரி செய்வார்.அதே சமயத்தில் அரசனின் மனதில் திருடனை பிடித்து தண்டனை தருவதையும் சட்டத்திற்கு ஏற்ப தண்டனை கொடுக்கப்படவேண்டும் என்பதையும் நாடுகிறது. ஆனால் மந்திரி அல்லது தலைவரின் அழுத்தத்தால் அவரின் சிபாரிசை ஏற்பார்.அந்த திருடனின் குற்றத்தை மன்னித்துவிடுவார். ஏனெனில் மந்திரி அல்லது தலைவர் ஆட்சியில் மிகப்பெரிய உறுப்பினர் மேலும் அரசரின் ஆட்சிக்கு பொலிவையும், புத்துணர்ச்சியை கொடுப்பவர்.இந்த சமயத்தில் தலைவர் அல்லது மந்திரியின் சிபாரிசை ஏற்காமல் இருந்தால் அவர்களுக்கு அதிருப்தி ஏற்படும்.பெரும் பணிகளெல்லாம் வீணவாகிவிடும்.ஆட்சியின் பொலிவானது குன்றிவிடும். இதனைவிட தனது ( அரசர்)

கோபத்தை விழுங்கி கொண்டு திருடனை மன்னிப்பது சிறந்தது என்பதாக கருதுகிறார்.இதற்கு شفاعة وجاهة ( பயத்தின் காரணமாக சிபாரிசை ஏற்பது என்று சொல்லப்படும்) இது போன்ற சிபாரிசானது அல்லாஹ்விடத்தில் ஒரு போதும் நிகழாது.எவரேனும் நபியை,நல்லோரை, தலைவரை,ஷஹீதை, வானவரை,பெரியோரை அல்லாஹ்விடத்தில் இவ்வாறு செய்பவர்கள் என்று எண்ணுபவர் அசலில் இணைவைப்பாளர் மேலும் மிகப்பெரிய அறிவிலி

அவர் அல்லாஹ்வின் அர்த்தத்தை விளங்கி கொள்ளவில்லை. அதிபதிக்கெல்லாம் அதிபதியான அதிபதியான ஆற்றலை அறவே விளங்கவில்லை. (தக்வியதுல் ஈமான்) நடுநிலையுடன் கவனியுங்கள்! அல்லாஹ்வை அல்லாஹ் என்பதாக, அவனின் கம்பீரம் அடக்கியாளுதல்,ஆற்றலின் மீது ஈமான் கொண்டு, அதிபதிகளெக்கெல்லாம் அதிபதி,தனித்தவன் இணையில்லாதவன் என்பதாக விளங்கிய எந்த ஒரு மு ீமீனாவது ஷாஹ் இஸ்மாயில் ( ரஹ்) அவர்களின் கருத்தில் முரண்பாடு கொள்வாரா? சிபாரிசை

மறுப்பவர் என்பதாக வாதிடும் பரலேவிகளே இது போன்ற சிபாரிசை அங்கீகரிக்க தயாரா? ஏற்கத்தயாரா? அடுத்த வகை: அரசனின் மகன்களோ அல்லது மனைவியோ,அரசருக்கு பிரியமானர்களோ திருடனுக்கு சாதகமாக சிபாரிசுக்காக எழுந்து நின்றால் அரசர் அவர்களின் மீது கொண்ட பிரியத்தினால் நிர்பந்தமாக திருடனின் குற்றத்தை மன்னிப்பார்.இதற்கு "ஷபாஅத் முஹப்பத்" என்று சொல்லப்படும். நேசத்திற்குரியவர்கள் தன் மீது அதிருப்தி கொள்வதை விட திருடனின் குற்றத்தை மன்னிப்பதானது சிறந்தது.இது போன்ற சிபாரிசும் அவனிடத்தில் சாத்தியமில்லை.எவரேனும்ஒருவரை அல்லாஹ்விடத்தில் இவ்வாறு சிபாரிசு செய்பவர் என்று கருதினால் அவர் இணைவைத்துவிட்டார்.

அறிவிலியாவார்.முதல் வகையைப் போன்றாகும். ஒருவருக்கு ஹபீபுல்லாஹ் என்பதாகவும்,ஒருவருக்கு கலீலுல்லாஹ் என்பதாகவும்,ஒருவருக்கு கலீமுல்லாஹ் என்பதாகவும் ஒருவருக்கு ரூஹுல்லாஹ் என்பதாகவும்,ஒருவரை ரஸூலுன் கரீம் என்பதாகவும்,ஒருவரை ரூஹுல்

குதுஸ்,ரூஹுல் அமீன் என்பதாக அதிபதிகளின் அதிபதி தன்னுடைய அடியார்களுக்கு இது போன்ற மிகவும் சிறந்த சிறப்பு பெயரை அளித்துள்ளான்.ஆனால் அதே சமயத்தில் அரசன் அரசன்தான்.அடிமை அடிமைதான். ஒவ்வொருக்கும் ஓர் அந்தஸ்து உள்ளது அதனை தாண்டி செல்ல முடியாது. அவனின் ரஹ்மத்தின் மூலம் ஒவ்வொரு உயிரும் மகிழ்ச்சிடன் தலைவணங்குகிறது. அவ்வாறே அவனின் காரணமாக இலையும் தண்ணீராகி விடுகிறது.(தக்வியதுல் ஈமானில்) நடுநிலைமையாக கவனித்து பாருங்கள்! இந்த கருத்தை எந்த ஒரு முஸ்லிமாவது மறுக்க முடியுமா? உலகில் வாழும் அரசர்களுக்கு அதிகாரிகள்,தலைவர்கள், அரசனின் மகன்கள்,அரசனின் மனைவிமார்கள் அனைவரின் மீதுள்ள அன்பின் காரணமாக அவர்களின் பேச்சை ஏற்றுக்கொள்ளும் நிர்பந்தம் உள்ளது.தனது விருப்பம் கருத்திற்கு எதிராக நிர்பந்தித்தினால் மாற்றமாக செயல்படுகின்றனர். அல்லாஹ் இது போன்ற இயலாமையை விட்டும் பரிசுத்தமானவன்.

மூன்றாவது வகை: திருடனின் திருட்டானது நிரூபணமாகிவிட்டது. ஆனால் எப்பொழுதும்

திருடுபவன் அல்ல.தீயகுணத்தால் தவறு நிகழ்ந்துவிட்டது.அந்த செயலின் மீது வெட்கப்படுகிறான்.இரவு, பகல் பயப்படுகிறான்.அரசனின் சட்டத்திற்கு ஏற்ப தனது குற்றத்தை ஒப்புக்கொள்கிறான். அதற்கு கொடுக்கப்படும் தண்டனையையும் அறிந்துள்ளான். அரசனிடமிருந்து விரண்டோடி தலைவரிடம்,மந்திரிகளிடம் பாதுகாவல் தேடவில்லை. அல்லாஹ்விற்கு எதிரில் எந்த பாதுகாவலரையும் நாடவில்லை.இரவு,பகலாக அரசனை முன்னோக்கியுள்ளான். எனக்கு என்ன தண்டனை கொடுக்க வேண்டுமோ அதனை செயல்படுத்துங்கள் என்கிறான். இந்த நிலையை பார்த்த அரசரின் உள்ளத்தில் இரக்கம் பிறக்கிறது.அதே சமயத்தில் (கொடுக்கப்பட வேண்டிய) தண்டனையை சிந்தித்தவாறு காரணமின்றி அவனை மன்னிப்தை விரும்பவில்லை.ஏனெனில் எங்காவது மக்களின் உள்ளங்களில் அரசாணையின் மதிப்பு குறைந்துவிடலாம்.எனவே அரசரின் விருப்பத்தின் பேரில் தலைவரோ அல்லது மந்திரியோ சிபாரிசு செய்வார்.அரசர், தலைவரின் கண்ணியத்தை அதிகரிக்க

வெளிரங்கத்தில் சிபாரிசு என்ற பெயரில் திருடனை மன்னிக்கிறான்.அந்த திருடன் மந்திரிக்கு நெருக்கமானவர், அறிமுகமானவர் என்பதனால் சிபாரிசு செய்யவில்லை.மாறாக அரசனின் விருப்பத்தின் பேரில்தான் சிபாரிசு செய்கிறார்.ஏனெனில் மந்திரியானவர் அரசருக்குதான் மந்திரியே தவிர திருடனுக்கு அல்ல.இதற்கு شفاعة بالاذن ( அனுமதி பெற்று சிபாரிசு செய்வதாகும்) இந்த வகையான சிபாரிசானது அல்லாஹ்விடத்தில் உண்டு.குர்ஆனிலும் ஹதீஸிலும் நல்லோருக்கும் நபிமார்களுக்கும் சிபாரிசு உண்டு என்பது இந்த வகையான சிபாரிசாகும் (தக்வியதுல் ஈமான்) தக்வியதுல் ஈமானின் அனைத்து மேற்சொன்ன கருத்துக்களின் மூலம் ஷாஹ் இஸ்மாயில் ஷஹீத் ( ரஹ்) அவர்கள் ஒட்டுமொத்த ஷபாஅத்தையும் மறுக்கவில்லை.மாறாக முதல் இரண்டு வகையான ஷபாஅத்தைதான் மறுக்கின்றனர்.மூன்றாவது வகையான شفاعة بالاذن கூடும் என்பதாகதான் கூறுகிறார்கள்.அடுத்து இந்த வகை ஷபாஅத் மட்டும் அனுமதிக்கப்பட்டது என்பதற்கான

அடுக்கடுக்கான ஆதாரங்களை இன்ஷா அல்லாஹ் பார்ப்போம்!

ஷபாஅத்தில் பரலேவிகளின் நிலைப்பாடு

ரிளாகான் பரலேவி "பரகாதுல் இம்தாதிய்யா" என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார் நபி ( ஸல்) அவர்கள் அனைத்து தேவைகளை நிறைவேற்றக்கூடியவர்கள் உலகம்,மறுமையின் அனைத்து விதமான நாட்டங்களும் அவர்களின் விருப்பத்தின் பேரில் உள்ளது.அதே பக்கத்தில் மற்றோர் இடத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறார் அல்லாஹுதஆலா சுவனத்தை நபி ( ஸல்) அவர்களுக்கு சொந்தமாக்கி கொடுத்துவிட்டான்.அதில் எதனை விரும்புகிறார்களோ,எவரை விரும்புகிறார்களோ மன்னித்துவிடுவார்கள். பரலேவிய அறிஞர் மௌலவி முஹம்மத் அம்ஜத் அலி அவரின் நூலான بہار شریعت ல் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள் நபி ( ஸல்) அவர்கள் அல்லாஹ்விற்கு துணை ஆட்சியாளராக உள்ளார்கள். உள்ளார்கள்.முழு உலகமும் நபி ஸல் அவர்களின் கட்டுப்பாட்டில் கொடுக்கப்பட்டுள்ளது. எதனை விரும்புவார்களோ செயல்புரிவார்கள்.எவரை

விரும்புவார்களோ அவர்களுக்கு கொடுப்பார்கள்.எவரை திருப்பி அனுப்ப விரும்புவாரோ அதன்படி செயல்படுவார்கள்.முழு உலகத்தின் அதிபதி முழு பூமியும் அவரின் ஆளுமைக்கு உட்பட்டது.முழு சுவனமும் அவர்களுக்கு உரிமையாக்கி கொடுக்கப்பட்டுவிட்டது. நரகம்,சுவன சாவியானது நபி ஸல் அவர்களின் கரத்தில் ஒப்படைக்கப்பட்டுள்ளது. (கருத்து) ஆக பரலேவி கொள்கையானது இவ்வாறு இருக்கும் போது நபி ( ஸல்) அவர்களின் ஷபாஅத்தை எப்படி ஈமான் கொள்வார்கள்? இதனை வைத்துப் பார்க்கும் போது ஷபாஅத் பரலேவிகளிடத்தில் அர்த்தமற்றது.இது நமது ஆய்வோ,சுயசிந்தனையோ அல்ல மாறாக ரிளாகான் பரலேவி குறிப்பிடுகிறார் தேவையுடையவர்தான் ஷபாஅத்தை விரும்புவார்.எங்கு தேவையுடையவர் இல்லையோ தனது கட்டளையால் விரும்பியதையெல்லாம் செய்யலாம் எனும் போது ஷபாஅத்தின் தேவை என்ன உள்ளது? (السنیۃ الانیقۃ فی فتاوی افریقیۃ )

குற்றச்சாட்டு: ரஹ்மத்துல் ஆலமீன் என்பது நபிகள் நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டுமே வழங்கப்பட்ட தனித்துவமான பண்பு அல்ல,பிற நல்லடியார்களையும் ரஹ்மத்துல் ஆலமீன் என்று அழைக்கலாம். [ பதாவா ரஷீதியா,வால்யூம் 2,பக்கம் 12 ]

குற்றச்சாட்டும் தக்க மறுப்பும்: முதலில் “பதாவா ரஷீதிய்யாவில்” உள்ள வாசகத்தை பார்ப்போம்! لفظ رحمة للعالمین مخصوص آنحضرت صلی سے ہے یا ہر شخص کو کہ سکتے ہیں جواب لفظ رحمت للعالمین خاصہ رسول الله کے ہیں بلکہ دیگر انبیاء اولیاء و علماء ربانین بھی موجب رحمت عالم ہوتے اگر چہ رسول صلی الله سب میں اعلی ہیں کہذا اگر دوسرے پر اس لفظ تاویل بول دیے جائز ہے ரஹ்மத்துல் ஆலமீன் என்பதானது நபி ஸல் அவர்ளுக்கு மட்டும் குறிப்பானதா? அல்லது எல்லாலோருக்கும் பயன்படுத்தலாமா? பதில்: ரஹ்மத்துல்லில் ஆலமீன் என்ற வார்த்தையானது நபி ( ஸல்) அவர்களுக்கு மட்டும் குறிப்பானது என்றாலும் மற்ற

நபிமார்களும் நல்லடியார்களும் உலமாக்களும் உலகில் ரஹ்மத்தாக உள்ளார்கள்.ஆனால் நபி (ஸல்) அவர்கள் அனைவரிலும் உயர்ந்தவர்கள்.எனவே மாற்று விளக்கத்துடன் மற்றவர்களுக்கு பயன்படுத்துவதானது அனுமதியாகும். விளக்கம்: குர்ஆனில் அல்லாஹ்வின் உள்ளமைக்கு ரஹீம் என்று சொல்லப்படுகிறது.நபி ஸல் அவர்களுக்கும் ரஹீம் என்று கூறப்பட்டுள்ளது.ஆனால் எந்த மடையானவது இவ்வாறு கூறுவானா? அல்லாஹ்வும்,நபி ஸல் அவர்களும் ரஹீம் என்பதால் சரிசமமானவர்கள். இதைப் போல ரஹ்மத்துல் ஆலமீன் என்று நபி ( ஸல்) அவர்களுக்கு சொல்வதற்கும் மற்ற நல்லடியார்களுக்கு சொல்வதற்கும் மிகப்பெரிய வித்தியாசம் உள்ளது.ஆனால் பரலேவிகளின் அறியாமைக்கு எந்த மருந்துமில்லை.

ஹள்ரத் நிஜாமுத்தீன் அவ்லியாவின் கலீபாவும் குறிப்பிடத்தக்க முரீதுமான ஹள்ரத் அமீர் ஹஸன் அலி ஸன்ஜரி ரஹ் அவர்களின் ஒரு சொல்லை எடுத்து வைக்கிறோம்.அவரின் நூலில் ஹள்ரத் அவர்களின் மல்பூஜாத்தை ஒன்று

சேர்த்துள்ளார்கள். முன்னுரையில் ரஹ்மத்துல் ஆலமீன் என்ற வார்த்தையை உபயோகித்துள்ளார் . خوجہ راستیں المقلب بہ رحمت للعالمیں ملک الفقراء و المسا کیں شیخ نظام الحق و الشرع ( ہشت ہشت உண்மையாளர்களின்

தலைவர்,புரட்டிப்போடுவர், அகில உலகத்தின் அருட்கொடை,வறியவர்கள் ஏழைகளின் அரசர் ஷரீஅத்தை சத்தியத்தை நிர்வகிக்கும் பெரியோர் பரலேவிகளே இப்பொழுது இதற்கு பதில் சொல்லுங்கள் நல்லோர்களான இவர்களைப் பற்றி உங்களின் தீர்ப்பு என்ன? இவர்களும் அல்லாஹ்வின் தூதரை விமர்சனம் செய்பவர்களா? (அல்லாஹ் பாதுகாப்பானாக!) பரலேவிகளே முதலில் உங்களின் கொள்கையை சேர்ந்தவர்களை விமர்சியுங்கள் பார்ப்போம்! காவஜா பரீத் இவரின் முரீத் யார் முஹம்மது இவர் பரலேவிய பெரியோர்களில் உள்ளவர் பரலேவிய மௌலானா அப்துல் ஹகீம் ஷரஃப் காதிரி அவர்கள்,அவரை அஹ்லுஸ்ஸுன்னாவின் பெரியோர்களில் சங்கையானவர்களில் உள்ளவர்கள் என்பதாக குறிப்பிட்டுள்ளார். யார் முஹம்மது அவர்கள் தனது دیوان محمد நூல் எழுதியுள்ளார்.இந்த

நூலிற்கு மௌலவி அஹ்மத் ஸயீத் காளிமி அவர்கள் நீண்ட அணிந்துரை வழங்கியுள்ளார்கள்.அதில் உள்ள கவிதை வரிகள் فردم از اغیار و طہ ہر کسم   زانکہ ہستم رحمۃ للعالمین
இதனின் கருத்து நான் மற்றவர்களை விட்டும் தனித்தவனாக இருக்கிறேன். எல்லோருக்கும் உதவுபவன்.நான் அகில உலகத்தின் அருட்கொடையாக இருக்கிறேன்.(دیوان محمدی)

குற்றச்சாட்டு தேவ்பந்திகளின் கொள்கையானது ஷைத்தானின் அறிவானது நபியின் அறிவை விட அதிகமாகும்.

தக்க மறுப்பு: உண்மையிலே ஒருவன் இது போன்ற கொள்கையைக் கொண்டிருந்தால் இது போன்ற வார்த்தையை கூறினால் உலமாக்களின் ஒன்றுப்பட்ட சொல்லின்படி அவன் காபிராகிவிட்டான்.மதம் மாறிவிட்டான் அவன் சபிக்கப்பட்டவன் அல்லாஹ்வின் அருளை விட்டும் விரட்டப்பட்டவன் என்று சொல்வதில் கொஞ்சமும் யோசிக்க தேவையில்லை.இது தான் தேவ்பந்த் உலமாக்களின் கொள்கையாகும்.ஹள்ரத் மௌலானா கலீல் அஹ்மத் (ரஹ்) அவர்கள் மீது சுமத்தும் குற்றச்சாட்டு மிகப்பெரிய அபாண்டமும் அவதூறுமாகும். பரலேவிகள்

வழக்கம் போல் அன்னாரின் கருத்தை திரித்து,புரட்டி விமர்சிக்கின்றனர்.இந்த குற்றச்சாட்டு எழுந்த பின்னணியையும் அதற்கான மறுப்பையும் இனி பார்ப்போம்! பரலேவிய அறிஞர் அப்துஸ்ஸமீ்் ராம்பூரி என்பவர் انوار ساطعہ در بیان مولود و فاتحہ என்ற பெயரில் நூலை வெளியிட்டார்.அதில் மார்க்கத்திற்கு முரணான சடங்குகள்,மற்றும் சம்பிரதாயங்கள் பித்அத்துகள் போன்றவைகளுக்கு மார்க்க வடிவம் கொடுத்தார்.இதற்கு மறுப்பாக ஹள்ரத் கலீல் அஹ்மத் ( ரஹ்)அவர்கள் "பராஹீன் காதிஆ" என்ற பெயரில் நூலை வெளியிட்டார்கள். பரலேவிய அறிஞர் அப்துஸ்ஸமீ்் வாதமும் அதற்கு ஹள்ரத் அவர்களின் மறுப்பும்:நபி ( ஸல்)அவர்கள் மௌலிது ஷரீ்்ப் நடக்கும் இடங்களுக்கு வருகை தருகிறார்கள். அதே சமயத்தில் நபி (ஸல்) அவர்கள் மௌலித் மஜ்லிஸில் வருகை தருகிறார்கள் என்பது இணைவைப்பாகும். ஏனெனில் எல்லா இடங்களிலும் இருப்பதானது அல்லாஹ்வின் தன்மையாகும் என்ற சொல்லப்படுவற்கு பரலேவிய அறிஞர் வாதம் ; பரலேவிய அறிஞர் அப்துஸ்ஸமீ்் மறுப்பு கொடுக்கிறார்.

அல்லாஹ் வானம்,பூமி அல்லாத அனைத்து இடங்களிலும் ஆஜராகிறான்.ஆனால் அதே சமயத்தில் நபி ஸல் அவர்கள் ஆஜராகுவதும் அல்லாஹ் ஆஜராகுவதும் ஒன்றல்ல.சரிசமமாக இருப்பதுதான் ஷிர்காகும்.இதற்கு ஹள்ரத் கலீல் அஹ்மத் (ரஹ்) பதிலடி: இந்தளவிற்கு இல்மில் அறியாமையில் உள்ளார்.ஷிர்க் என்பதானது அல்லாஹ்வின் தன்மையில் இணையாக இருப்பதற்கு சொல்லப்படும்.சரிசமமாக இருப்பது கருத்தல்ல என்பதாக

வாதிட்டால் எந்த முஷ்ரிகும் முஷ்ரிகாக இருக்கமாட்டான். உதாரணமாக உலகத்தின் அனைத்து காரியங்களையும் கட்டுப்பாட்டில் வைத்திருத்தல், வாழ்வாதரங்களை அளித்தல்,குழந்தை தருதல்,சிரமங்களை அகற்றுதல் மற்றவைகள் அனைத்திற்கும் அசலான படைப்பாளன், உணவளிப்பவன்,எல்லா செயல்களிலும் எல்லையற்ற ஆற்றல் அல்லாஹ்விற்கும் மட்டும்தான் உள்ளது என்பதாக ஏற்கின்றனர்.ஆனால் அவர்களின் இணைவைப்பு என்னவெனில் மற்ற நல்லோர்களுக்கும் அவன் தன்மைகளில்

வரையறுக்கப்பட்ட அளவு விருப்பங்கள் உள்ளது என்பதால் அவர்களை வணங்கி வருகின்றனர்.குர்ஆனின் வசனங்களின் மூலம் இதனை நாம் தெளிவாக புரிந்து கொள்ளமுடியும். ராம்பூரியின் இந்த வாதத்தின் மூலம் உலகில் எந்த முஷ்ரிகும் இருக்கு முடியாது.ஏனெனில் முஷ்ரிகும் விருப்பங்கள்,நாட்டங்கள், ஆற்றல் அனைத்திலும் அல்லாஹ்வும், நல்லோர்களும் சரிசமம் என்பதாக ஏற்கமாட்டான்.(பராஹின் காதிஆவின் சுருக்கமான கருத்து ) அடுத்து ராம்பூரியின் மற்றொரு அபாயகரமான வாதம்: அந்த நூலின் 54 ம் பக்கத்தில் ஷைத்தானைக்கும், வானவர்களுக்கும் உள்ள ஆற்றலைப் பற்றி பேசுகிறார்.இதற்கு ஆதாரமாக تفسیر معالم التنزيل رسالہ برزخ, شرح مواہب போன்ற நூல்களை ஆதாரம் கொடுத்துள்ளார்.மலகுல் மௌத் அனைவரின் உயிரையும் கைப்பற்றுபவர் ஜின்,மனிதன்,விலங்குகள் சுருக்கமாக சொல்ல வேண்டுமெனில் முழு உலகத்தில் உள்ள படைப்புகள் அனைத்தையும் அல்லாஹ்,அவருக்கு சிறிய விரிப்பு அல்லது பாத்திரத்தைப் போன்று ஆக்கி

கொடுத்துவிட்டான்.இதைப் போன்று கிழக்கிலிருந்து மேற்கு வரை மரணிக்கும் ஒவ்வொரு நபரிடமும் ஒவ்வொரு விநாடியும் ஆஜராகிறார்.மிஷ்காத் ஷரீபின் நீண்ட ஹதீஸின் மற்றும் ஹள்ரத் காளி ஸனாவுல்லாஹ் பானிபத்தி நூலான "தத்கிரதுல் மௌதா" மற்றும் தப்ரானியின் அறிவிப்பை எடுத்து சொல்கிறார் மலகுல் மௌத் நபி ( ஸல்) அவர்களுக்கு கூறுகிறார் என் பார்வை எல்லா இடங்களையும் அடைகிறது.இதைப் போன்று பல்வேறு நூல்களிலிருந்தும், ஹதீஸ்களிலிருந்தும் இந்த முடிவை தருகிறார்.

மலகுல் மௌத் எல்லா இடங்களிலும் ஆஜாராகிறார்.மலகுல் மௌத்தைப் போன்று ஷைத்தானும் எல்லா இடங்களிலும் ஆஜராகிறான்.இதற்கு ஆதாரமாக சில நூல்களை எடுத்து காட்டியுள்ளார். ஷைத்தான் ஒவ்வொரு மனிதனிடமும் உள்ளான்.ஆக மலகுல் மௌத்தானவர் எல்லா இடங்களிலும் ஆஜராகுவதற்கு அல்லாஹ் ஆற்றலை கொடுத்ததைப் போன்று நல்லோர்களும் எல்லா இடங்களிலும் ஆஜராக முடியும்.(அன்வாரே ஸாதிஆவின் சுருக்கம்)

பரலேவிய அறிஞர் கொடுத்த ஹதீஸ்,மார்க்க அறிஞர்களின் கூற்றின் மூலம் ஷைத்தானும் மலகுல் மௌத்தும் எல்லா இடங்களிலும் ஆஜராகுவார்கள் என்பதை புரிய முடிகிறது.ஆனால் அதே சமயத்தில் நபி (ஸல்) அவர்கள் மௌலிது மஜ்லிஸில் ஆஜாராகுவார்கள் என்பதற்கு தனியானதொரு ஆதாரத்தை தரவேண்டும் ஆனால் அதற்குரிய ஆதாரத்தை தராமல் அடுத்த உதாரணத்திற்கு ராம்பூரி தாவுகிறார் சூரியன்,சந்திரன் எல்லா இடங்களிலும் உள்ளது என்கிறார் ஆக நபி (ஸல்) அவர்கள் மௌலித் சபைகளில் ஆஜராகிறார் என்பதற்கு குர்ஆனிலோ,ஹதீஸ் நூல்களிலோ,கொள்கை சார்ந்த நூல்களிலோ ஏற்கத்தகுந்த எந்த ஒரு ஆதாரமும் இல்லை என்பதை புரிய முடிகிறது. ராம்பூரி எடுத்து வைத்து வாதங்களுக்கு ஹள்ரத் மௌலானா கலீல் அஹ்மத் ரஹ் மறுப்பு: அஹ்லுஸ்ஸுன்னாவின் கொள்கையானது அல்லாஹ்வின் எந்த தன்மையும் அடியானிடம் இருக்காது.அவன் தன்னுடைய தன்மையை சில நிழலைப் போன்று கொடுத்திருப்பான்.அதனை விட அதிகமாக இருக்காது.سمع ( கேட்பது) بصر ( பார்ப்பது) علم

(அறிவு) இவைகள் அல்லாஹ்விற்கு உண்மையாக ( حقيقى) படைப்புகளுக்கு வெளிப்படையாக ( مجازى ) இருக்கிறது.யாருக்கு எந்தளவிற்கு ஆற்றலோ அல்லது தகுதியோ கொடுப்பானோ அதனை விட கொஞ்சம் கூட அதிகமாக இருக்காது.ஷைத்தானுக்கு கொடுத்த ஆற்றல்,மலக்குமார்களுக்கு உள்ள தகுதியும் ஆற்றலும் சூரியன்,சந்திரன் எந்த அமைப்பில் வைக்கப்பட்டுள்ளதோ அதனை விட அதிகமான செல்லாது.செல்லவும் முடியாது.நெருக்கமான வானவர்களுக்கு அவருக்கு உள்ள தகுதிக்கு ஏற்ப சக்தியை கொடுத்துள்ளான். ஷைத்தானுக்கு அவனுக்கு ஏற்ப ஆற்றல் கொடுக்கப்பட்டுள்ளது. இதனையும் புரிந்து கொள்ளவேண்டும்! எவருக்கேனும் உள்ள செயல்களுக்கு ஏற்ப கொடுக்கப்பட்ட ஆற்றலில் கூடுதல் குறைவாக இருப்பதால் அவர்களுக்குரிய அந்தஸ்து குறைந்து விடும் என்பதும் அடிப்படை அல்ல.உதாரணமாக ஷைத்தானுக்கு கொடுக்கப்பட்டுள்ள ஆற்றல்,சக்தியின் காரணமாக அவன் மு'மீனின் அந்தஸ்தை விட உயர்ந்து விட முடியாது.ஏனெனில் அவனுக்கு

கொடுக்கப்பட்ட ஆற்றலுக்கும்,சக்திக்கும் எந்த ஒரு மதிப்பும் இல்லை.

கொள்கையானது உதாரணங்களின் மூலம் நிரூபணமாகாது.இங்கு உறுதிமிக்க தெளிவான ஆதாரங்கள் அவசியமாகும்.அல்லாஹ் ஒவ்வொருக்கும் அவருக்குரிய பொறுப்பு அந்தஸ்து அவரின் தகுதிக்கு ஏற்ப கொடுத்துள்ளான். அவ்வாறே அவருக்கு வலிமையையும் ஆற்றலையும் தகுதிக்கு ஏற்ப வழங்கியுள்ளான்.இதனால் யாருக்கு கொடுத்துள்ளான் எந்த வகையில் கொடுத்துள்ளான் என்பதை அல்லாஹ்விடத்திலிருந்துதான் அறிய முடியும்.நான்கு நெருக்கமான வானவர்களுக்குரிய பொறுப்புகளும், செயல்பாடுகளும்,ஆற்றலை மற்றவர்களுக்கு தரப்பட்டுள்ளதை வைத்து முடிவு செய்யக்கூடாது. படைப்புகளிலே இழிவிற்குரியவனான ஷைத்தானுக்கு உள்ள முற்றிலும் ஏமாற்றுதல்,சூழ்ச்சி செய்தல் போன்ற மோசமான தகுதிகள் மற்றும் ஆற்றல்களை படைப்புகளிலே சிறந்தவரான அண்ணல் நபி ஸல் அவர்களின் தகுதிகளோடு ஒப்பிட்டு சொல்வதானது ராம்பூரி,அவரை

அறிஞராக ஏற்கும் பரலேவிகள்,ரிளாகான் போன்ற அசத்தியவாதிகளுக்கு சாதரணமாக தோன்றலாம்.சத்திய கொள்கையை கொண்ட உலமாக்கள் அசத்தியத்தை கண்டு வாய்மூடி மௌனியாக இருக்கமாட்டார்கள்.அடுத்து எல்லா இடங்களிலும் சூரியன் இருப்பதை வைத்து ஆதாரம் எடுப்பதன் மூலம் பரலேவிகளின் அறியாமை அப்பட்டமாக வெளிப்படுகிறது. பொதுவாக மார்க்க ஞானம், விளக்கமுள்ளவர்களுக்கு இது போன்ற உதாரணங்கள் வேலைக்காகாது.இதே போன்று ஜின்கள் காற்றில் பறப்பதை கண்டு உருமாறுவதை கண்டு அவைகளை விட சிறந்த படைப்பான மனிதனுக்கும் அந்த ஆற்றல் உண்டு என நம்ப வேண்டியதாகிவிடும். ஒவ்வொரு முஸ்லிமும் ஷைத்தானை விட நல்லவன் என்பதால் ஷைத்தானுக்கு உள்ள ஆற்றல் முஸ்லிமுக்கும் உண்டு என நம்ப வேண்டியதாகிவிடும். சுருக்கம் என்னவெனில் மௌலானா கலீல் அஹ்மத் ரஹ் அவர்கள், மலகுல் மௌத்,ஷைத்தானுடைய விஷயம் குர்ஆன் ஹதீஸ் ஆகியவற்றின் உறுதிமிக்க ஆதாரங்களைக் கொண்டு நிரூபிக்கப்பட்ட

விஷயமாகும்.கொள்கை சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கு இப்படிப்பட்ட ஆதாரங்கள் அவசியம்.ஆதாரமின்றி ஒன்றை நாமாக கொள்கை என நம்புதல் அர்த்தமற்ற விஷயமாகும்.ஆகவே பரலேவிகளின் கூற்றிற்கு ஆதாரம் தேவை.இதைத்தான் இந்த எதிரிகள் நபி ஸல் அவர்களை விட இப்லீஸுக்கு அதிக இல்ம் இருக்கிறது என்று மௌலானா அவர்கள் கூறியதாக அபாயகரமான விளக்கம் தருகிறார்கள்.ஆக கலீல் அஹ்மத் ரஹ் அவர்கள் மறுப்பு கொடுத்ததானது நபி ஸல் அவர்கள் எல்லா இடங்களிலும் ஆஜராகிறார்கள் மௌலிது சபைகளில் ஆஜராகுகிறார்கள் என்பதை பற்றித்தான் மாறாக நபி ஸல் அவர்கள் இல்ம் மற்றும் அதனின் விசாலத்தைப் பற்றி அறவே இங்கு விவாதிக்கவில்லை. இறுதியாக பராஹுன் காதிஆவில் உள்ள வாசகங்களில் பரலேவிகள் செய்த திரித்தலும் புரட்டலையும் இனி பார்ப்போம் شیطان اور ملک الموت کا حال دیکھ کر علم محیط زمین کا فخر عالم کو خلاف نصوص قطعیہ کے بلا دلیل محض قیاس سے ثابت کرنا شرک نہیں تو کون سا ایمان کا حصہ இது அசலான வாசகம் இதனின் கருத்தானது உறுதிமிக்க தெளிவான ஆதாரங்களைக் கொண்டு

நிரூபணமான ஒன்றைக் கொண்டு அதாவது ஷைத்தான் மற்றும் மலகுல் மௌத் முழு உலகத்தையும் சூழ்ந்து அறியும் ( علم محیط زمین ) நிலையை பார்த்து ஆதாரமின்றி கியாஸைக் கொண்டு மட்டும் நபிக்கும் ( எல்லா இடங்களிலும் ஆஜாராகுவது)உண்டு என நிரூபிப்பதானது ஷிர்க் இல்லையெனில் இறைநம்பிக்கையில் எந்த பகுதி இருக்க முடியும்? ஆக இங்கு ஆய்வானது விவாதமானது நபி ( ஸல்) அவர்களுக்குரிய ஞானத்தை பற்றியது அல்ல மாறாக நாயகம் ஸல் அவர்கள் மௌலிது சபைகளுக்கு ஆஜராகுவார்களா? என்பதை பற்றிதான் என மக்களுக்கு புரிந்துவிடும் என்பதால் இந்த பகுதியை பரலேவிகள் மறைத்து இருட்டடிப்பு செய்துவிட்டனர்.நபி ( ஸல்) அவர்கள் மௌலிது சபைக்கு வருகை தருகிறார்கள் என்பதனை உறுதிமிக்க ஆதாரங்களைக் கொண்டு நிரூபிக்க வேண்டும்.மாறாக உறுதிமிக்க ஆதாரங்களைக் கொண்டு நிரூபணமான ஒன்றைக் கொண்டு கியாஸ் எடுக்க கூடாது.لعنة الله على الكاذبين

பரேல்விகளின் குற்றச்சாட்டும் மறுப்பும் :

**காகம் உண்பது ஆன்மீகரீதியாக நன்மைபயக்கும் செயலாகும்.**

**[பதாவா ரஷீதியா பாகம் 2, பக்கம் 1301 ]**

இந்த குற்றச்சாட்டை சுமத்துவதன் மூலம் பரலேவிகள் தங்களின் அறியாமையை பகிரங்கப்படுத்துகின்றனர்.தேவ்பந்திகள் காக்கை பிரியாணி ஹலால் என்பதாக கேலியும் விமர்சனமும் செய்கின்றனர்.இதற்கு தெளிவான பதிலை இனி பார்ப்போம்! காகம் பலவகைகளில் உள்ளது.1) ஒரு வகை செத்தவைகள் அசுத்தங்களை மட்டும் சாப்பிடும் இது ஹராமாகும்.2) இரண்டாவது வகை தானியங்களை மட்டும் சாப்பிடும் இது ஹலாலாகும்.3) மூன்றாவது வகை தானியம்,அசுத்தங்கள் இரண்டையும் சேர்த்து உண்பவை இதற்கு عقعق என்று அரபியிலும் உர்துவில் كوا என்றும் பார்ஸியில் زاغ என்றும் சொல்லப்படும். மாலிக் மத்ஹபில் எல்லா வகையான காகமும் ஹலால் المالكية قالوا يحل اكل الغراب بجميع انواعه (الفقه على المذاهب الاربعة) மாலிக் மத்ஹப் அறிஞர்கள் கூறுகிறார்கள்: காகத்தின் அனைத்து வகைகளும் ஹலாலாகும். இதற்கு எதிராக பரலேவிகள் வாயை திறக்கவில்லை.தேவ்பந்த் உலமாக்களை

மட்டும் விமர்சிப்பதன் காரணம் காழ்ப்புணர்ச்சிதான். தேவ்பந்த் உலமாக்கள் காகம் சாப்பிடுவது ஹலால் என்பதனை ஹனபி பிக்ஹின் ஒளியில் தீர்ப்பளித்தால் பரலேவிகள் வானத்திற்கும் பூமிக்கும் குதிக்கின்றனர். பரலேவிகளுக்கு பதாவா ரஷீதிய்யாவில் இந்த தீர்ப்பானது கண்ணிற்கு தென்படுகிறது.ஆனால் அவர்களைச் சார்ந்த ரிளாகானின் தீர்ப்பானது கண்ணிற்கு தென்படவில்லையா? ரிளாகானிடத்தில் வௌவால் ஹலாலாகும்.வௌவால் சிறியதோ,பெரியதோ அதற்கு (باگل) என்று சொல்லப்படுகிறது.இது ஹலாலா? அல்லது ஹராமா? என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது.சில அறிஞர்கள் இதனை சாப்பிடுவது ஹராம் என்கின்றனர்.இதன் காரணம் கோரைப்பற்கள் கொண்டது.ஆனால் ஹனபி மத்ஹபிற்கு ஏற்ற கருத்து ஹலாலாகும்.பொதுவாக கோரைப் பற்கள் இருப்பதால் ஹராமல்ல.மாறாக அந்தப் பற்களின் மூலம் வேட்டையாடியானல்தான் ஹராமாகும். வெளிப்படையில் பார்க்கும் போது வௌவால் கீறிகிழித்து வேட்டையாடுவதில்லை. இதனால்

துர்முஹ்தாரின் ஹராம் என்று சொல்லானது பலகீனமானது.(பதாவா ரிஜ்வியய்யா) காக்கை பிரியாணி என்பதாக கேலி செய்யும் பரலேவிகள் வௌவால் பிரியாணி சாப்பிட ஆசையா? காகம் ஹலால் என்பதாக சாப்பிட்டு காட்டுங்கள் என்பதாக சவாடல் விடுகிறீர்களே! வௌவால் ஹலால் என்பதால் மூன்றாம் நாள்,ஏழாம் நாள்,பத்தாம் நாள்,நாற்பதாம் நாள் பாத்திஹாவிற்கு வௌவால் பிரியாணி தயார் செய்வீர்களா?

ஆந்தை ஹலாலா சிலர் கூறுகிறார்கள்:பனங்காடை சாப்பிடக்கூடாது.ஆந்தை சாப்பிடலாம். ஷாபியி மத்ஹபின் ஒரு சொல்லின் படி ஹலாலாகும்.(பதாவா ரிஜ்வியய்யா) ரிளாகான் பரலேவி ஆந்தை சாப்பிடுவது ஹலால் என்ற கருத்தை பலகீனமானது என்பதாக கூறியிருந்தாலும் இந்த கருத்திற்கு எதிராக பரலேவிகள் கொடிபிடிக்க தயாரா? இனி ஹனபி மத்ஹபின் ஒளியில் இந்த தீர்ப்பை அலசுவோம்! ஹள்ரத் மௌலானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ( ரஹ்) கொடுத்த தீர்ப்பானது ஹனபி மத்ஹபிற்கு முழுக்க ஏற்புடையது.இமாம் முஹம்மது இப்னு

முஹம்மது ( ரஹ்)அவர்களின் பிரபல்யமான "மப்ஸூத்" நூலில் காகத்தின் வகைகளை அதனின் சட்டங்களை ஆய்வு செய்தவாறு கூறியுள்ளார் فان كان الغراب بحيث يخلط فياكل الجيف تارة و الحب تارة فقد روي عن ابى يوسف انه يكره لانه اجتمع فيه الموجب للحل و الموجب للحرمة و عن ابي حنيفة انه لا باس باكله و هو الصحيح على قياس الدجاجة فانه لا باس باكلها காகம் சில தடவை அசுத்தத்தை சாப்பிடுகிறது.சில தடவை தானியத்தை சாப்பிடுகிறது.இமாம் அபியூசுப் ( ரஹ்) அறிவிப்பின் படி மக்ரூஹாகும்.ஏனெனில் ஹலால்,ஹராம் இரண்டும் இணைந்துள்ளது. அபூஹனீபா ( ரஹ்) அவர்களிடத்தில் இதனை உண்பது ஹலாலாகும்.இதுதான் சரியான கருத்தாகும்.கோழியை முன்வைத்து கியாஸ் எடுத்து ஹலால் என்பதாக தீர்ப்பளித்துள்ளார்கள். ஏனெனில் கோழியை உண்பதும் பிரச்சனையில்லை. பரலேவிகளே பதிலளியுங்கள்! இமாம் அபூஹனீபா ( ரஹ்) அவர்கள் உங்களுக்கு முன்னோடி என்பதாக ஏற்றுள்ளீர்கள். வாக்கியங்களை மீண்டும் மீண்டும் படியுங்கள்! இமாம் சர்கஸி அவர்கள்,இமாம் அபூஹனீபா ( ரஹ்) அவர்களிடமிருந்து எடுத்தெழுதியுள்ளார்கள்.

அதனை சரியானது என உறுதிப்படுத்தியுள்ளார்.

இமாம் அபூபக்கர் காஸானி ஹனபி ( ரஹ்) காகம் ஹலால் ஹராம் சம்பந்தமான ஆய்வு فحصل من قول ابي حنيفة ان ما يخلط من الطيور لا يكره اكله كالدجاج و قال ابويوسف يكره لان غالب اكله الجيف இமாம் அபூஹனீபா (ரஹ்) சொல்லின் மூலம் அறிய முடிகிறது.ஹலால்,ஹராம் இரண்டையும் உண்ணுகிற பறவைகளானது மக்ரூஹ் இல்லை உதாரணமாக கோழி இமாம் அபூயூசுப் ரஹ் மக்ரூஹ் ஏனெனில் அதிகமான உணவானது செத்தவைதான். அடுத்து عناية على هامش فتح القدير اما الغراب الابقع و الاسود فهو انواع ثلاثة نوع يلتقط الحب ولا ياكل الجيف و ليس بمكروه و نوع منه لا ياكل الا الجيف الذي سماه المصنف الابقع الذي ياكل الجيف و انه مكروه و نوع يخلط ياكل الحب مرة و الجيف اخرى ولم يذكره فى الكتاب و هو غير مكروه عند ابي حنيفة مكروه عند ابي يوسف அப்கஃ என்று சொல்லப்படும் கருப்பு நிற காகம் மூன்று விதமாக உள்ளது.1)தானியத்தை மட்டும் உண்பது செத்தவைகளை உண்பதில்லை இது மக்ரூஹ் அல்ல 2)செத்தவைகளை மட்டும் உண்பவை இதனை முஸன்னிஃப் அவர்கள் அப்கஃ என்பதாக கூறுகிறார்.இது மக்ரூஹாகும்.3) இரண்டை வகையான உணவையும் சாப்பிடும் இதனைப் பற்றி நூலில்

குறிப்பிடவில்லை.இமாம் அபூஹனீபா ( ரஹ்) அவர்களிடம் மக்ரூஹ் இல்லை.இமாம் அபூயூசுப் ( ரஹ்) மக்ரூஹ் என்கின்றார்கள்.பிறகு கருத்து வேறுபாட்டிற்கான காரணத்தை தெளிவுப்படுத்துகிறார்கள். اصل ذلك ان ما يؤكل الجيف فلحمه இதற்கான அடிப்படை என்னவெனில் செத்தவைகளை சாப்பிடுவதால் அதனின் இறைச்சியும் சதையும் ஹராமிலிருந்து வளரக்கூடியது.இதனால் தானியத்தை மட்டும் சாப்பிடுபவையில் அசுத்தம் பெறப்படவில்லை என்பதால் ஹலாலாகும்.இரண்டையும் சாப்பிடுபவை இமாம் அபூஹனீபா ரஹ் அவர்களிடம் ஹலால் இதுதான் சரியான சொல்லாகும்.ஏனெனில் கோழியானது இரண்டையும் சாப்பிடுகிற போதும் நபி (ஸல்) அவர்கள் அதனை உண்கொண்டார்கள்.

துர்முஹ்தார் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்கள் حل غراب الزرع الذي ياكل الحب والارنب والعقعق هو غراب بجمع بين اكل (جيف و حب و الاصح حله در مختار مع فتاوي شامي தானியத்தை சாப்பிடும் காகமானது ஹலாலாகும். "அக்அக்" என்ற காகம் செத்தவைகளையும் தானியத்தையும் சாப்பிடும் சரியான சொல்லின் படி ஹலாலாகும்.பிக்ஹ் ஹனஃபி

பிரபல்யமான நூலான பதாவா ஆலம்கிரி الغراب الابقع مستخبث طبعا " அப்கஃ்ஃ" என்ற காகம் இயற்கையிலே அசுத்தமானது.அது செத்தவைகளை மட்டும் சாப்பிடும் فاما الغراب الزرعى الذي يلتقط الحب مباح طيب தானியத்தை மட்டும் உண்ணும் காகமானது அனுமதிக்கப்பட்டுள்ளது. தூய்மையானது. وان كان الغراب بحيث يخلط فياكل الجيف تارة و الحب اخري فقد روي عن ابي يوسف رحمه الله انه عليه السلام انه يكره و عن ابي حنيفة انه لا باس باكله و هو الصحيح على قياس الدجاجة காகம் தானியம்,செத்தவைகளை சாப்பிடுபவையாக இருந்தால் அபூயூசுப் (ரஹ்) அவர்களிடத்தில் மக்ரூஹ் என்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது. அபூஹனீபா ( ரஹ்) அவர்கள் அதனை உண்பது தவறில்லை.இதுதான் சரியான கருத்தாகும்.கோழியை முன்வைத்து கியாஸ் எடுத்துள்ளார்கள். இமாம் அபூஹனீபா ( ரஹ்) அவர்களின் மத்ஹபில் இந்த விஷயத்தில் இரவு,பகலைப் போன்று தெளிவாக நிரூபணமாகிவிட்டது. மௌலானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ( ரஹ்) அவர்களின் தீர்ப்பானது முற்றிலும் இமாமின் தீர்ப்பிற்கு ஏற்ப உள்ளது.மஸாயில்களில் இமாமின் தீர்ப்பிற்குதான் முதலில் முக்கியத்துவம்

தரவேண்டும்.இதனை ரிளாகான் பரலேவியும் ஏற்கிறார் பிக்ஹ் ஹனபியிலே சிலர் ஸாஹிபைன் இமாம் அபியூசுப் (ரஹ்) இமாம் முஹம்மது (ரஹ்) சொல்லின் மீதுதான் தீர்ப்பு கொடுப்பார்கள்.ஆனால் சரியானது பேணுதலானது முந்தியது இமாம் அபூஹனீபா (ரஹ்) சொல்தான்.அடியேனின் நிலைப்பாடு எந்த ஒரு மஸ்அலாவிலும் குறிப்பிடத்தக்க வகையில் நிர்பந்தம் இல்லையெனில் இமாமின் சொல்லை விட்டு மாறக்கூடாது.இதனை பற்றிய தெளிவான விளக்கம் என்னுடைய ரிஸாலாவான اجلى الاعلام بان فتوى على القول الامام اذا قال الامام فصدقوه فان القول ما قال الامام இமாம் அபூஹனீபா ( ரஹ்) அவர்கள் கூறியதை உண்மைப்படுத்துங்கள். சொல் என்றால் இமாமின் சொல்லாகும். ہم حنفی ہیں نہ کہ یوسفی یا شیبانی நாம் ஹனபிகள் யூசுபிகளோ அல்லது ஷைபானிகளோ அல்ல

அடுத்து மேற்சொன்ன ஆதாரங்களின் மூலம் காகம் சாப்பிடுவது கூடும் என்பதை விளங்க முடிகிறது.ஆனால் நன்மை கிடைக்கும் என்பதற்கு என்ன ஆதாரம்? பரலேவிகள் ரஷீத் அஹ்மத் கங்கோஹி ( ரஹ்) அவர்களிடத்தில் கேட்கப்பட்ட கேள்வியை முழுமையாக

சொல்லாமல் இருட்டடிப்பை செய்து விடுகின்றனர்.எனவே கேட்கப்பட்ட கேள்வியை முழுமையாக கூறினால் இந்த குற்றச்சாட்டிற்குரிய பதிலை நாம் அறிந்து கொள்ளலாம்! سوال: جس جگہ زاغ معروفہ کواکثر حرام جانتےہوں اور کھانے والے کو برا کہتے ہوں تو اسی جگہ اس کو کوا کھانے والے کو کچھ ثواب ہوگا یا نہ ثواب ہوگا نہ عذاب கேள்வி: எந்த இடத்தில் அறியப்பட்டுள்ள காகம் (زاغ معروفہ ) அதிகமானவர்கள் அதனை ஹராம் என்பதாக எண்ணியுள்ளனர்.அதனை உண்பவர்களை விமர்சிக்கின்றனர் எனில் அங்கு அந்த காகத்தை உண்பவர்களுக்கு நன்மை கிடைக்குமா? கிடைக்காதா? தண்டனையுமில்லையா? جواب: ثواب ہوگا பதில்: நன்மை கிடைக்கும். அசலில் காகம் சாப்பிடுவது அனுமதிக்கப்பட்ட காரியாகும்.ஆனால் இங்கு மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட ஒரு காரியத்தை மார்க்கத்தை மக்கள் ஹராம் என்பதாக எண்ணுகின்றனர்.அந்த இடத்தில் ஹலால் என்பதை நிரூபிக்க செயல்படுத்தி காட்டுகிறார்.எனவே மார்க்கத்தின் நிலையை நடைமுறையை அமல்செய்ததால் அதற்கு நன்மை கிடைக்கிறதே தவிர மாறாக காகம்

சாப்பிடுவதற்கு அல்ல. எனவே கேட்கப்பட்ட கேள்விக்கு ஹள்ரத் ரஷீத் அஹ்மத் கங்கோஹி ரஹ் அவர்கள் சரியான பதிலைதான் அளித்துள்ளார்

பரலேவிகள் ஹகீமுல் உம்மத் அஷ்ரப் அலி தானவி (ரஹ்) அவர்கள் மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டும் அதற்கு தக்க மறுப்பு:

அவர்களின் முரீத் அன்னாரின் பெயரை சொல்லி கலிமாவும் தரூத் படித்தும் கூட தானவி (ரஹ்) அவர்கள் அவரை எச்சரிக்கவில்லை. கண்டிக்கவில்லை.மாறாக சுன்னத்தை பின்பற்றுபவர் என்பதாக சாட்சியளித்துள்ளார்கள்! தானவி அவர்கள் தனது 1)நுபுவ்வத்தை வாதிடுகிறார் (அல்லாஹ் பாதுகாப்பானாக)2) கனவை கண்டவரை எச்சரிக்கவில்லை கண்டிக்கவில்லை மேலும் கனவு கண்டவர் தனது ஈமானையும் நிகாஹ்வையும் புதுப்பிக்க தகுதியானவர். இறைநிராகரிப்பை பொருந்திக்கொள்வதும் இறைநிராகரிப்பாகும். இதனால் தானவி காபிராகுவார் (அல்லாஹ் பாதுகாப்பானாக!) 3)இப்படிப்பட்ட ஷைத்தானிய ஊசலாட்டங்களுக்கு புகழத்தக்க விளக்கத்தை ஏன் கூறினார் ? கனவிற்கு விளக்கம் ஏன்

கூறினார்? பரலேவிய அறிஞர் உமர்அலி வரம்பு மீறி கூறுகிறார் தேவ்பந்திகளின் கலிமாவும் முஸ்லிம்களின் கலிமாவைவிட்டு தனித்து உள்ளது. நமது தக்க பதில்: முதலில் இது சம்பந்தமான நிகழ்வை பார்ப்போம்! தானவி (ரஹ்) அவர்களிடம் இதுவரை பைஅத் செய்து கொள்ளாத ஒருவர்.அவர் கனவு காண்கிறார்.அஷ்ரப் அலி தானவி பெயரைக் கலிமாவில் ஓதுவதாக. அவர் தனது கடிதத்தில் தானவி (ரஹ்) அவர்களுக்கு எழுதுகிறார்; இப்படி ஓதுவது சரியல்ல என்பது எனக்குக் கனவிலும் புரிகிறது.ஆனால் நான் விரும்பாமலேயே எனது நாவு இதையே இரண்டு,மூன்று முறை கூறுகிறது.அப்போது தங்களை என் முன் காண்கிறேன்.இதன் பிறகு விழித்துக்கொண்டேன். கனவிலே நடந்த தவறு பற்றி நினைவு வந்தவுடன் நான் எழுந்து உட்கார்ந்து கொண்டேன்.இந்த நினைவை மனதை விட்டு போக்க வேண்டுமென்று, பிறகு திருப்பிப்படுத்த நாயகத்தின் மீது 'ஸலவாத்' ஓதி, தவறுக்குப் பரிகாரம் காண முயற்சிக்கிறேன்.ஆனால் அப்பொழுதும் 'அல்லாஹும்ம ஸல்லி அலா ஸய்யிதினா வமவ்லானா அஷ்ரப் அலி '

என்றே நாவில் வருகிறது.நான் தூங்கிவிடவில்லை. விழித்துக்கொண்டுதான் இருக்கிறேன்.ஆனால் நான் சுய விருப்பத்தோடு இல்லை ; கட்டுண்டவனாக இருக்கிறேன்; நாவும் எனது இஷ்டத்தில் இல்லை! மறுநாள் அதனை எண்ணி மிகவும் அழுதேன்.(அல்இம்தாத்)

இதன் மூலம் நாம் சில விஷயங்களை புரிந்து கொள்ள முடியும்.கலிமா அவர் கூறியதானது கனவில் நிகழ்ந்ததாகும்.கனவு கண்டவர் திடுக்கத்தில் உள்ளார்.கனவிலேயே தனது தவறை உணர்கிறார்.ஆனால் தன்னை அறியாமலேயே நாவானது மொழிகிறது.தூங்கி எழுந்தவுடன் தரூத் ஷரீப் தவறுதலாக ஓதுகிறார்.அதில் தனது சுயநினைவை இழந்தவராக கட்டுப்பாட்டை இழந்தவராக இது மட்டுமல்ல மாறாக தனது தவற்றை விளங்கி மிகவும் அழுகிறார்கள்

முதல் தக்க பதில் : கனவைப் பொறுத்தவரை சில சமயங்களில் சில கனவுகள் வெளிப்படையில் திடுக்கம் நிறைந்ததாகவும் , அபாயகரமானதாகவும் இருக்கும்.ஆனால் உண்மையில் அதனின் விளக்கம் நல்லதாக

இருக்கும்.சில சமயங்களில் சில கனவுகள் வெளிப்படையில் நல்லதாக தெரியலாம்.ஆனால் அதன் விளக்கமானது கெட்டதாக அமைந்து விடலாம்.இதனால் கனவை அதனின் வெளிப்படையான நிலையுடன் ஒப்பிட்டுப்பார்ப்பது மிகப்பெரிய அறியாமையும், அறிவீனமாகும்.இதற்கு உதாரணத்தைப் பார்ப்போம்! உம்முல் பள்ல் பின்த் ஹாரிஸ் (ரளி) அவர்கள் கனவு கண்டார்கள்.நபியின் சமூகத்திற்கு வந்து சொன்னார்கள் யா ரசூலுல்லாஹ்! இன்று இரவு நான் கெட்ட கனவொன்று கண்டேன் என்றார்கள் அதற்கு நாயகம் ஸல் அவர்கள் என்ன கனவு என்பதாக கேட்டார்கள் ? அதற்கு அந்தப் பெண்மணி கூறினார்கள் மிகவும் திடுக்கம் நிறைந்த கனவு மீண்டும் அண்ணலார் என்ன கனவு என்பதாக கேட்டார்கள்? அதற்கு உம்முல் பள்ல் அவர்கள் கூறினார்கள் தங்களின் உடலின் ஒரு துண்டானது துண்டிக்கப்பட்டு என் மடியில் விழுவதைப் போன்று கண்டேன்.நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் நீர் மிகவும் நல்ல கனவு கண்டுள்ளீர்கள் அதற்கு விளக்கமாவது இன்ஷா அல்லாஹ் என்

ஈரக்குலைக்கு (பாத்திமா ரளி) மகன் பிறப்பான்.உன்னுடைய மடியில் விளையாடுவான்.அதன் பிறகு அண்லார் கூறியதைப் போன்றே என் மடியின் மீது ஹுஸைன் ரளி அவர்கள் விளையாடினார்கள். (மிஷ்காத்)

நன்றாக கவனித்துப்பாருங்கள்! எந்தளவிற்கு வெளிப்படையில் கனவானது அபாயகரமானதாக இருந்தும் கூட கனவின் உண்மை நிலையை கவனிக்கும் போது மகிழ்ச்சி நிறைந்ததாக உள்ளது. அடுத்த மற்றொரு கனவை பார்ப்போம்! ஒரு முறை அபூஹனீபா (ரஹ்) கனவு கண்டார்கள்.அதில் பெருமனாரின் கப்ரின் அருகில் சென்றார்கள்.பிறகு அதை தோண்டினார்கள்.அதில் உள்ள எலும்புகளை எடுத்து தனது நெஞ்சோடு அணைத்துக்கொண்டார்கள் இதனால் திடுக்கிட்டு விழித்த இமாம் அவர்கள் தனது ஆசிரியரிடத்தில் சென்று கனவை கூறினார்கள்.அதற்கு ஆசிரியர் அவர்கள் விளக்கமளித்தார்கள் நபியின் ஹதீஸ்களை பின்பற்றுவீர்கள் நபியின் மார்க்க கல்வியை நெஞ்சில் சுமப்பீர்கள் என்றார்கள்.

(ஆதாரம்:ஹைறராதுல் ஹிஸான்) இந்த கனவை கண்டதால் அபூஹனீபா (ரஹ்) அவர்கள் மீது பரலேவிகள் என்ன பத்வா அளிப்பார்கள்? நாம் சத்தியமிட்டு சொல்கிறோம்! இங்கு நாம் இமாம் அஃளமிற்கு பதிலாக தேவ்பந்த் அறிஞர் பெயரை கூறியிருந்தால் தேவ்பந்திகள் நபியின் விரோதத்தின் காரணமாக நபி ஸல் அவர்களின் கப்ரை தோண்டினார்கள் என்பதாக பரலேவிகள் பத்வா அளித்திருப்பார்கள். ஆக இந்த இரு கனவையும் கூறுவதானது வெளிப்படையில் கனவானது பயங்கரமாக இருக்கலாம்.அதனால் அதனின் விளக்கமும் அச்சுறுத்தலாக இருக்க வேண்டும் என்பது அவசியமில்லை.எனவே எந்த கனவை முரீது கண்டாரோ வெளிப்படையில் அச்சுறுத்தலாக இருப்பதால் அதனின் விளக்கமும் அச்சுறுத்தலாக இருக்க வேண்டும் என்பது அவசியமில்லை. அடுத்து இந்நிகழ்வானது கனவில் நிகழ்ந்தது.கனவானது தூக்கத்தில் பார்ப்பதாகும்.தூங்கும் போது வெளிப்படும் வார்த்தைகளை ஷரீஅத் கவனிக்காது.ஒரு வாதத்திற்கு கனவில் குப்ரான வார்த்தை வெளிப்பட்டாலும் குப்ராகாது. ஆயிஷா (ரளி)

அறிவிப்பு:மூன்று பேரை விட்டும் எழுது கோல் உயர்த்தப்பட்டுவிட்டது (நன்மை தீமை எழுதப்படாது) தூங்குபவர் விழிக்கும் வரை , பைத்தியம் தெளியும் வரை , சிறுவர் பருவம் எய்தும் வரையும் (நூல்:அல்ஜாமிஉஸ்ஸஙீர்) மற்றொரு அறிவிப்பில் தூக்கத்தில் (நிகழும்) தவறுகளுக்கு குற்றமில்லை விழிப்பு நிலையிலே (நிகழும்) தவறுகள் குற்றமாகும்.இது போன்ற ஹதீஸ்களின் மூலம் மார்க்க மேதைகள் , தூங்கும் போது ஏதாவது நிகழ்ந்தால் அது கவனிக்கப்படாது என சட்டம் எடுத்தனர். முஹம்மது அமீன் இப்னு உமர் ஷாமி குறிப்பிட்டுள்ளார் இதனால்தான் தூங்குபவரின் பேச்சின் மூலம் உண்மை,பொய்,செய்தி, வாக்கியம் போன்றவை நிகழ்ந்தால் கவனிக்கப்படாது."தஹ்ரீருல் உசூலில் " வருகிறது.தூங்குபவரின் பேச்சின் மூலம் உதாரணமாக முஸ்லிம் முர்த்தாக மாறினால்,மனைவியை தலாக் விட்டால் இவை வீணானது.இதற்கு செய்தி,உண்மை,பொய் எதுவும் ஆகாது.உதாரணமாக பறவைகளின் சப்தத்தைப் போன்று தல்வீஹ் என்ற நூலில்

உள்ளது.இந்த வாக்கியங்களின் மூலம் நாம் அறிய முடிகிறது அகராதி ரீதியாகவும் ஷரீஅத் ரீதியாகவும் பேச்சாகாது.இது மூடலான விஷயத்தை போன்றாகும்.எனவே ஹதீஸ்,பிக்ஹின் தெளிவான ஆதாரங்களின் மூலம் தூக்கம் ,கனவின் காரணமாக மார்க்க தீர்ப்பளிக்கப்படாது.

இரண்டாவது வாதமும் மறுப்பும் :சில சமயங்களில் கனவானது உண்மையில் ஒன்றாக இருக்கலாம். வெளிப்படையில் ஒன்றாக இருக்கலாம்.தூக்கத்தில் நிகழ்ந்தவைகளுக்கு குற்றம் பிடிக்கப்படாது என்பதை ஏற்றுக்கொண்டாலும் விழிப்பு நிலையிலும் அதே கலிமாவை கூறுகிறார் எனும் போது இது குப்ர் இல்லையா ? நமது பதில்: அந்த முரீதின் நாவில் மொழிந்ததானது அவரின் சுயவிருப்பமின்றி ,அவரின் கட்டுப்பாட்டையும் மீறி வெளிப்பட்டது என்பதை முன்பே தெளிவுப்படுத்தியுள்ளோம்.தனது தவறை எண்ணி வருந்தியுள்ளார். அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான் ربنا لاتواخذنا ان نسينا او اخطانا எங்களுடைய ரப்பே! எங்களின் மறதியையும்

தவற்றையும் பிடித்துவிடாதே! முஃமீன்களின் பிரார்த்தனையை அல்லாஹ் அங்கீகரித்தும் கொண்டான்.மிஷ்காதின் ஓர் அறிவிப்பில் வருகிறது ان الله تجاوز عن امتي الخطا و النسيان و ما استكرهوا عليه எனது உம்மத்தின் தவறையும்,மறதியையும்,எந்த காரியத்தின் மீது நிர்பந்த்திக்கப்பட்டார்களோ (குற்றத்தை) அல்லாஹ் மன்னித்துவிட்டான். அடுத்து மற்றொரு அறிவிப்பு "முஸ்லிமில்" வருகிறது காட்டுப் பகுதியில் தன் வாகனத்துடன் ஒருவர் செல்கிறார்,அப்பொழுது உணவும்,நீரும்,வைக்கப்பட்டிருந்த அவரது வாகனம் கிடைக்காது என்று நம்பிக்கையிழந்து விட்ட நிலையில் திடீரென அவரது வாகனம் கண் முன் நிற்க கண்டு உடனே அதன் கயிற்றைப் பிடித்துக் கொண்டு மகிழ்ச்சி மிகுதியால் ,யா அல்லாஹ் ,நீ என் அடியான்,நான் உன் இரட்சகன் எனத் தவறுதலாகக் கூறுகிறார் ,அவர் மகிழ்ச்சியடைவதைவிட அதிகமாக அல்லாஹ் தன் அடியான் தவ்பாச் செய்யும் போது மகிழ்ச்சியடைகிறான்"என்று நபி ஸல் அவர்கள் கூறியதை ஹஜ்த் அனஸ் ரளி அறிவிக்கிறார்கள். அவரை அறியாமல்

குப்ரான வார்த்தையை கூறியதால்தான் குற்றம் பிடிக்கப்படவில்லை. இது போன்ற ஹதீஸ்களை மார்க்க மேதைகள் சட்டம் எடுக்கின்றனர்.காளிகான் (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்: தவறு செய்பவர் எவரெனில் அவருக்கு நாட்டமின்றி ஒரு கலிமாவின் இடத்தில் மற்றொரு கலிமா கூறிவிடுபவருக்கு சொல்லப்படும் (நூல் பதாவா காளிகான்) அதாவது தவறு செய்பவரின் நாவில் குப்ரின் கலிமா வந்துவிட்டது.உதாரணமாக குப்ரில்லாத வார்த்தையை பேச நாடிய வேளையில் தவறுதலாக அவரது நாவில் குப்ரின் வார்த்தை வெளிப்பட்டுவிட்டது.அனைத்து அறிஞர்களிடம் இது குப்ர் இல்லை. (பதாவா காளிகான்) ஏறத்தாழ இது போன்றே கஷ்புல் அஷ்ரார் ஷரஹ் உசூல் பஜ்தவி ,பதாவா ஷாமி,ஷரஹ் பிக்ஹ் அக்பர் போன்ற நூல்களில் உள்ளது. மௌலவி ரிளாகானின் நிலைப்பாடு: ஷரீஅத்திலே நிர்பந்த நிலையின் சட்டங்களும் சுயவிருப்ப நிலையில் சட்டங்களும் தனித்தனியானது. ஆக நடுநிலையோடு பாருங்கள்! அந்த முரீது "நான் சுயநினைவில்லாமல்,நிர்பந்தமாக,

கட்டுப்படுத்தமுடியாமல் கூறிவிட்டேன்" என்று கூறியுள்ளார்.மேலும் அதன் பேரில் மிகவும் அழுதுள்ளார் பிறகு இந்த நபரை தானவி ரஹ் அவர்கள் காபிர் என ஏன் கூறவேண்டும் ? அவரே காபிர் இல்லையெனும் போது பிறகு குப்ரை பொருந்திக் கொண்டதாக எப்படி அமையும்?

மூன்றாவது வாதமும் தக்க மறுப்பும் :

முரீதானவர் அஷ்ரப் அலி தானவியின் பேரில் கலிமா கூறியதானது அவரின் மீதுள்ள பிரியத்தினாலாகும்.ஒரு வாதத்திற்கு தவறுதலாக நிகழ்ந்ததென ஏற்றுக்கொண்டாலும் பிறகு ஏன் அதே கலிமாவை திரும்ப திரும்ப கூற வேண்டும் ? அமைதியாக அந்த முரீது இருந்திருக்கலாமே எனவே தானவியின் மீதுள்ள பிரியத்தினால் தான் கூறியுள்ளார் என்பதானது இதன் மூலம் தெளிவாகிறது.பதில்: பரலேவிகள் தெளிவாக விளக்கிய பிறகும் கூட கேள்விகளை அடுக்கிகொண்டு செல்கிறார்கள். அறிவூப்பூர்வமான வாதமோ அல்லது ஆதாரப்பூர்வமான வாதங்களை வைத்தால் கூட பரவாயில்லை வெறும் யூகங்களை வைத்து கேள்வி தொடுத்துள்ளார்கள்

பரலேவிகளுக்கு தானவி (ரஹ்) போன்ற தேவ்பந்த் உலமாக்களை காபிர் என தீர்ப்பளிப்பதில் ஒவ்வொரு நாளும் நேரத்தை செலவழித்து வருகின்றனர்.ஆனால் இன்றும் கூட உண்மையை அறிந்து கொள்ள விரும்பும் நடுநிலையாளர்கள் வாழ்ந்து வருகின்றனர் அவர்களுக்கு பதில் அளிக்கிறோம் அந்த கலிமாவை ஏன் திரும்ப திரும்ப கூறிக்கொண்டிருந்தார்கள்?அமைதியை ஏன் கடைப்பிடிக்கவில்லை? இதற்கு இரண்டு காரணங்கள் இருக்கலாம். 1) திரும்ப திரும்ப சொன்னதின் காரணம் சரியான கலிமாவானது நாவில் வெளிப்பட்டு முந்தைய தவறான கலிமாவிற்கு பகரமாகிவிடவேண்டும் என்பதற்காக இருக்கலாம். 2)இந்த நிலையிலே மரணம் ஏற்பட்டால் (அல்லாஹ் பாதுகாப்பானாக) தவறான வார்த்தையை கூறிய நிலையில் இறுதி முடிவு ஏற்பட்டுவிடும் என்பதால் மீண்டும் கலிமாவை மொழிந்திருக்கலாம். ஏனெனில் சரியான கலிமாவை உச்சரித்து கெட்ட முடிவு ஏற்படுவதை விட்டும் தன்னை காத்துக்கொள்ளவதற்காக இருந்திருக்கலாம்.தானவி (ரஹ்) அவர்கள்

மீதுள்ள பிரியத்தினால் மீண்டும் மீண்டும் மொழிந்தார் என கூறினால் ஏன் தவறாக ஓதுகிறோம் என எண்ணவேண்டும் ? பிறகு தவறை நினைத்து ஏன் அழவேண்டும்? எனவே கலிமாவானது தானவி ரஹ் அவர்கள் மீதுள்ள அன்பினால் ஏற்பட்டதல்ல என்பதானது தெள்ளத்தெளிவாக விளங்க முடிகிறது.அதே சமயத்தில் பரலேவிகள் இது போன்ற அடிப்படையற்ற குற்றச்சாட்டை எழுப்புவதன் மூலம் அறவே அறிவில்லை என்பதையும் புரியமுடிகிறது.

பரலேவிகளே உங்களின் அங்கீகாரம் பெற்ற அறிஞர் கூறுவதைப் பாருங்கள்!

பரலேவிகளின் நம்பிக்கைக்குரிய சூபியும் பெரியோரும் வலி குலாம் பரீத் அவர்கள் தனது மல்பூஜாதிலே கூறியுள்ளார்கள் حضرت مولانا فرمایا کرتے تھے کہ ہمارے حضرت شیخ کے تمام مریدین برگزیدہ تھے اور محبت شیخ میں اس قدر محو تھے کہ کلمہ طیبہ میں محمد رسول اللہ حضرت شیخ کے ڈر سے کہتے تھے ور نہ ان کا جی چاہتا تھا کہ شیخ کے نام کا کلمہ پڑھیں (حوالہ مقابیس المجالس ) ஹள்ரத் மௌலானா கூறினார்கள் எங்களின் ஹள்ரத் அனைத்து முரீதின்களை விட ஷைகிடத்தில் தனித்துவம் பெற்றவர்கள்.மேலும் ஷைகின் மீதுள்ள அன்பனாது இந்தளவிற்கு அவரை ஆட்கொண்டிருந்தது.கலிமா தய்யிபாவிலே

முஹம்மது ரஸூலுல்லாஹ் என்று ஷைகின் மீதுள்ள பயத்தினால் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவ்வாறு இல்லையெனில் அவரின் உள்ளமானது ஷைகின் பெயரில் கலிமா படிப்பதை விரும்பியது. பரலேவிகளே இதற்கு பதில் கூறுங்கள்! "ஷைக்" மற்றும் "பீரின்" மீது பிரியத்தினால் கலிமாவை யார் படித்தார் ? ஷைகின் மீதுள்ள பிரியத்தினால் இஸ்லாமிய கலிமாவின் இடத்தில் ஷைகின் கலிமாவை விரும்பியது பரலேவிகளா ? தேவ்பந்த் உலமாக்களா? சுய விருப்பமின்றி கலிமாவை படித்தவரை காபிர் என்பதாக விமர்சித்தால் உங்களின் பெரியோரை காபிர் என விமர்சிக்க தயாரா?

நான்காவது வாதமும் தக்க மறுப்பு : ஒரு நபர் ஒவ்வொரு நாளும் இறைநிராகரிப்பு வார்த்தைகளை கூறிக்கொண்டிருந்தார். பிறகு ஒரு நாள் சுயவிருப்பமின்றி என்னை அறியாமல்,என் கட்டுப்பாட்டையும் மீறி இது போன்று நிகழ்ந்தது என்றால் அவரின் பேச்சானது ஏற்கப்படுமா? அதே போல் ஒருவர் ஒவ்வொரு நாளும் தானவியை திட்டிக் கொண்டு இருக்கிறார் பிறகு ஒரு நாள்

சுயவிருப்பமின்றி திட்டினால் ஏற்றுக்கொள்வீர்களா? பதில்: தானவி (ரஹ்) சம்பந்தப்பட்ட நிகழ்விற்கும் இந்த குற்றச்சாட்டிற்கும் அறவே தொடர்பில்லை.ஏனெனில் அந்த முரீதிடமிருந்து ஒவ்வொரு நாளும் இந்த தவறு நடந்தது.பலதடவை நடந்தது என்பதற்கு எந்தவித ஆதாரமுமில்லை.அதற்கு மாறாக கனவில் கலிமாவை ஓதினார்.அதே போல் விழிப்பு நிலையிலே தவறுதலாக ஒரு தடவை மட்டும் நிகழ்ந்துள்ளது.ஒரு தடவை இரு தடவை நாவில் தவறுதல் ,சறுக்குதல் ஏற்படுவதானது நடைமுறைக்கும் , பழக்கத்திற்கும் எதிரானதோ பாரதூரமானதோ அல்ல.மேலும் பயங்கரமான ,அச்சுறுத்தும் கனவை கண்டு கண்விழித்த பிறகு சுயவிருப்பமில்லாமல் அவர் கட்டுப்பாட்டையும் மீறி நாவானது மொழிந்தது.தானவி ரஹ் அவர்களை இது போன்று விமர்சித்தால் என்ன செய்வீர்கள் ? என்று கேட்டதற்கு பதிலானது அவரும் சுயவிருப்பமின்றி, நாட்டமின்றி விமர்சித்தால் பிறகு அவர் காரணத்தை எடுத்துக் கூறினால் மன்னிப்போம் ஐந்தாவது வாதமும் தக்க

மறுப்பும் கனவிற்கு விளக்கமானது பொருத்தமாகவும் சரியாகவும் அமையவில்லை பதில் நாம் முன்பே தெளிவுப்படுத்தி கூறிவிட்டோம்.கனவானது வெளிப்படையில் கெட்டதாக இருந்தால் அதனின் பலனானது கெட்டதாக இருக்க வேண்டிய அவசியமில்லை. குற்றச்சாட்டை சுமத்துவதற்கு முன்பாக குறைந்த பட்சம் அந்நூலில் உள்ள நிகழ்வை முழுமையாக ஒரு முறையாவது படித்திருக்க வேண்டும்.அல்லது படித்தும் கூட சத்தியத்தை மறைத்து தேவ்பந்த் உலமாக்கள் மீது அவதூறை அள்ளிவீசவேண்டும் என்பதற்காக இருக்கலாம்.இந்த குற்றச்சாட்டிற்கு அந்த நூலிலே பதில் உள்ளது.அதனை இனி பார்ப்போம்! ஹள்ரத் ஹகீமுல் உம்மத் தானவி ரஹ் அவர்கள குறிப்பிடுகிறார்கள்: சில சமயங்களில் கனவிலே அறியமுடியும்.நபி (ஸல்) அவர்கள் வருகை தருகிறார்கள்.மனதும் அதனை சாட்சி பகரும் நபி (ஸல்)அவர்கள்தான் என்பதை ஆனால் காணும் நேரத்தில் தெரிய வருகிறது.தோற்றமானது வேறு ஒருவராக இருந்தால் அதற்கு கனவிற்கு

விளக்கமளிக்கும் அறிஞர்கள் கூறுகிறார்கள் இதன் மூலம் சுட்டிகாட்டப்படுவதானது என்னவெனில் அந்த நபர் சுன்னத்தை பின்பற்றியவராவார். இவ்விதமாக கனவில் வேறு நபரின் தோற்றமானது எடுத்துக்காட்டப்பட்டால் அதனின் விளக்கமானது நபியின் சுன்னத்தை பின்பற்றுபவர் என கொடுக்கப்பட்டுள்ளது.இதே போன்று நபியின் பெயர் அல்லாமல் வேறு நபரின் பெயரை மொழிந்தால் அதனின் விளக்கமானது சுன்னத்தை பின்பற்றுதல் என்று சொல்வதினால் ஷரீஅத் ரீதியாக என்ன குறை ஏற்பட்டுவிடும். இந்தக் கனவின் மூலம் அஷ்ரப் அலி தானவி ரஹ் அவர்கள் நுபுவ்வத்தை வாதிடுகிறார் என கூறுவதானது அப்பட்டமான அவதூறாகும்.அல்லாஹ் பாதுகாப்பானாக கொஞ்சம் திறந்த மனதுடன் சிந்தியுங்கள் அஷ்ரப் அலி தானவி ரஹ் அவர்கள் நுபுவ்வத்தை வாதிடுபவராக இருந்திருந்தால் நபியின் சுன்னத்தை பின்பற்றுபவர் என்பதாக எப்படி கூறியிருப்பார் இது போன்ற நிகழ்வானது மிர்ஸா குலாம் காதியானி அல்லது வேறு எவரேனும் நுபுவத்தை வாதிடுபவராக இருந்திருந்தால்

இப்படித்தான் நபியின் சுன்னத்தை பின்பற்றுபவன் என்பதாக கூறியிருப்பார்களா ((முக்கிய குறிப்பு பரலேவிகள் நுபுவ்வத் எனும் ஆசனத்தில் ரிளாகான் பரலேவியை அமர்த்தியுள்ளார்கள் இது சம்பந்தமாக அறிய விரும்பினால் மௌலானா ஹள்ரத் ஸாஜித் கான் நக்ஷபந்தி அவர்களின் தாமத்பரகாதுஹு கட்டுரை برلویوں کا نبی کون ہے என்பதை படிக்கவும்.ரிளாகான் பரலேவி நுபுவ்வத்தை வாதிடுகிறார் என்பதாக மற்றொரு கட்டுரை எழுதியுள்ளார் گستاخی رسول کون فیصلہ آپ کریں என்ற கட்டுரையை பார்வையிடவும்.))

அதே சமயத்தில் ஹள்ரத் தானவி (ரஹ்) அவர்கள் தனது கனவின் விளக்கத்தை ஏற்றாகவேண்டும் என்பதாக வற்புறுத்தவுமில்லை. அன்னார் குறிப்பிடுகிறார்கள் இந்த கனவானது ஷைத்தானின் ஊசலாட்டத்தினால் அல்லது சிந்தனை ரீதியான நோயினால் கனவு வந்திருக்கலாம்.இந்த கனவிற்கு இது (நாம் கூறிய) விளக்கமாக கூட இல்லாமல் இருக்கலாம்.ஆனால் கனவிற்கு தவறான விளக்கம் தருவதானது எண்ண ஓட்டத்தினால் ஏற்படும்.இதன் பேரில் குற்றம்

சுமத்தமுடியாது (நூல் அல்இம்தாத் ) காஜா பக்தியாரி (ரஹ்) கூறுகிறார்கள் ஒரு நாள் நானும் முரீதுகள் பலரும்,ஷைகு முஈனுத்தீன் சிஷ்தி ரஹ் அவர்களது சமூகத்தில் கூடி இருந்தோம்.அப்போது வெளியே இருந்து ஒருவர் வந்தார்.வந்தவுடன் அவர் தமது சிரசை ஷைக் அவர்களின் பாதத்தில் வைத்துக் கூறினார் தங்களிடம் 'பைஅத்' பெற நான் வந்தேன் என்று. அப்போது ஷைக் கேட்டார்கள்.நீ கலிமா எப்படி ஓதுகிறாய் ? லா இலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்று ஓதுகிறேன்! ' லா இலாஹ இல்லல்லாஹு ஷிஷ்தீ ரஸூலுல்லாஹ் என்று ஓது ! இதைக் கேட்ட அவர் அப்படியே ஓதினார்.ஷைகு அவர்கள் இதன்பின் பைஅத்தும் கொடுத்து ,ஆடையும் சன்மானம் வழங்கினார்கள்.(பவாயிதுஸ்ஸாலிஹீன்)

ஹஜ்ரத் ஷிப்லீ ரஹ் அவர்களிடம் ஒருவர் வந்தார்.நான் தங்களிடம் 'பைஅத்' செய்து கொள்ளும் 'நிய்யத்தில் வந்தேன் ' என்று கூறினார் அதைக்கேட்ட ஷைக் அவர்கள் 'பைஅத் கொடுக்க சம்மதம் ; ஆனால், நான் கூறுவது போல் நீ செய்ய வேண் வேண்டும்'

என்று கூறினார்கள்.அவரும் முழு சம்மதம் தெரிவித்தார்.அப்போது ஷைக் அவர்கள் மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சியில் கண்டது போலவே கலிமாவைப் பற்றிக் கேட்டுவிட்டு லா இலாஹ இல்லல்லாஹு ஷிப்லீ ரஸூலுல்லாஹ் என்று ஓதும்படி கூறினார்கள். மேற்கண்ட நிகழ்ச்சிகளில் கண்டதுபோல்,அல்லாமா தானவி ரஹ் அவர்கள் யாரிடமும் அஷ்ரப் அலி ரஸூலுல்லாஹ் என்று கலிமா ஓதச்சொல்லவில்லை. ஆனாலும் அவர்களை 'காபிர்' என்று (நவூதபில்லாஹ்) பத்வா கொடுத்த பரலேவிகள் ஷைக் முயீனுத்தீன் சிஷ்தி (ரஹ்) பற்றியும் அல்லாமா ஷிப்லீ ரஹ் பற்றியும் என்ன பத்வா கொடுக்கிறார்கள்?

அடுத்து பரலேவிகளே உங்களைச் சார்ந்தவர்களின் நிலையை கொஞ்சம் கவனித்துப் பாருங்கள் பரலேவிய அறிஞர் பீர் கவாஜா ஃபரீத் பீர் பரீத் அவர்கள் பரலேவியர்களின் பெரியோர்களிலும் இறைநேசர்களிலும் நம்பத்தகுந்தவருமாக உள்ளார்கள்.இவரைப் பற்றி அறிமுகம் மல்பூஜாத் மகாபீஸூல் மஜாலிஸில் உள்ளது.அந்த நூலின்

உர்துமொழிபெயர்ப்பானது பரீதின் வழிகாட்டுதல்கள் ( ارشادات فرید) என்ற பெயரில் வெளியானது.மகாபீஸூல் மஜாலிஸில்

அவரின் குறிப்பிடத்தக்க கலீபாவான மௌலானா ருக்னுத்தீன் அவருக்கு முன்பாக அதனை படித்துக் காட்டியுள்ளார்.அதனை சரிபார்த்தல், நம்பகத்தன்மையானது என்பதை ஏற்படுத்திக் காட்டியுள்ளார். حضرت خواجہ غلام فرید رحمہ الله سجادہ نشین چا چڑا شریف (تذکرہ علمائے اہل السنہ و الجماعة )

மற்றொரு பரலேவிகளின் பீர் பீர் நஸ்ருத்தீன் ஹள்ரத் கவாஜா குலாம் ஃபரீத் நாவானது உண்மைக்கு விளக்கமாக உள்ளது.( شیخ (لطمة الغيب الشیوخ خواجہ غلام فرید رحمہ الله وابستگان سلسلہ چستیہ کے نزدیک با لعموم اور بصیر پوری و سیالوی صاحب نزدیک بالخصوص مستند و حجت کتاب مقابيس المجالس

لطمة الغيب)

முக்கிய குறிப்பு: பவாயித் பரீதிய்யானது கவாஜா குலாம் பரீதின் தொகுப்பாகும்.கவாஜா குலாம் பரீதின் மல்பூஜாதானது ஏற்கத்தகுந்த தொகுப்பாக உள்ள மகாபீஸூல் மஸாலிஸ் அந்த நூலிலே குலாம் பரீதின் தஸ்னீஃப் என்பதாக கூறப்பட்டுள்ளது.இதைப் போன்று ரிளாகான் ஆதரவாளர் முனாளிர் முஹம்மத்

ஹஸன் அலி ரிஜவி அவரின் நூலான برق آسمانی லே அந்த நூல் கவாஜா பரீதின் தஸ்னீப் என்பதாக ஏற்றுள்ளார்.(இவ்வளவு விரிவாக இதனை கூறுவதன் நோக்கம் தேவ்பந்த் உலமாக்களின் வாதங்களுக்கு பதிலளிக்க முடியாமல் அந்த நூலிற்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லை என்பதாக பிதற்ற ஆரம்பித்தனர்.) سجادہ نشین پیر بل شریف அவரின் மகனார் முஹம்மத் உமர் அவரின் கலிமா انگریز اللہ کے رسول ہیں ஆங்கிலம் அல்லாஹ்வின் ரஸூல் لندن کعبة اللہ லண்டன் அல்லாஹ்வின் க◌ஃபா அடுத்து ரிளாகானின் தரூத்: ஹள்ரத் தானவி ரஹ் அவர்களின் முரீத் நாட்டமின்றி,விருப்பமின்றி அவரின் கட்டுப்பாட்டையும் மீறி தரூத் ஓதியதால் பொங்கி எழுந்த பரலேவிகள் ரிளாகானின் பெயரால் உள்ள தரூத்திற்கு பொங்கி எழதயாரா? (இந்த அனைத்து ஆதாரங்களுக்கும் அந்த நூலின் போட்டோ காபி இத்துடன் தரப்படுகிறது.)

ஷாஹ் இஸ்மாயில் ஷஹீத் (ரஹ்) அவர்கள் மீது சுமத்தும் குற்றச்சாட்டும் அதற்கான தக்க மறுப்பும் : அல்லாஹ் நாடினால் நபிகள் நாயகம்

ஸல்லலாஹு அலைஹிவஸல்லம் அவர்களைப் போன்று கோடானு கோடி பேர்களை உருவாக்குவான்"
[நூல் - தக்வியத்துல் ஈமான் ,பக்கம்
நமது தக்க பதில் அல்லாஹ்விற்கு (பொய்சொல்ல சாத்தியம் உண்டா) امكان الكذب என்ற கொள்கையை போன்றுதான் இந்த امتناع النظير (அல்லாஹ் நபி (ஸல்) அவர்களை போன்றவர்களை கொண்டு வர சக்தி உடையவனா) என்ற கொள்கையாகும்.அல்லாஹ் பொய் சொல்ல மாட்டான். அல்லாஹ்விடத்தில் பொய் நிகழாது.அல்லாஹ் பொய் சொல்வான் என்று கூறினால் அவன் காபிராகுவான் அதே சமயத்தில் அல்லாஹ் பொய் சொல்ல சக்தி உடையவன்.அதைப் போன்றுதான் நபி (ஸல்) அவர்களுக்குப் பிறகு எந்த நபியும் வரமாட்டார்கள்.நபித்துவம் என்பதானது முடிவடைந்துவிட்டது.இனி கியாமத் வரையில் அண்ணல் எம்பெருமானார் ஸல் அவர்கள்தான் நபியாவார்கள்.எவராது நபி ஸல் அவர்களுக்கு பிறகு நபி வருவார்கள் என வாதிட்டால் அவர் காபிராகுவார்.ஆனால்

அதே சமயத்தில் அல்லாஹ்தஆலா நபி ஸல் அவர்களைப் போன்று வேறு ஒருவரை கொண்டு வர சக்தி உடையவன்.(ஆனால் அவ்வாறு கொண்டு வரமாட்டான்) பரலேவிகளால் அங்கீகரிக்கப்பட்ட நூலான பவாயிதில் புவாதில் உள்ளது அல்லாஹ் நாடினால் நபிக்கும் (நரகின்) வேதனை தரமுடியும் (அல்லாஹ் பாதுகாப்பானாக!) ஆனால் நபிக்கு வேதனை தரமாட்டான்.ஆகவே இங்கு தக்வியதுல் ஈமானில் சொல்ல வருவதானது அல்லாஹ்வின் ஆற்றலைப் பற்றியதாகும்.இது சம்பந்தமாக இந்த Link ல் சென்று பார்வையிடவும் https://m.facebook.com/story.php?story_fbid=932473756800662&id=352261448155232&refid=52&_ft_=top_level_post_id.1005660409481996%3Atl_objid.1005660409481996%3Athid.352261448155232&__tn__=%2As பரலேவிகளால் ஏற்கப்படும் அறிஞர் ஷைக் யஹ்யா முனீரி (ரஹ்) அவர்கள் தனது மக்தூபாதில் நபி (ஸல்) அவர்களைப் போன்று நபி படைப்பதற்கு அல்லாஹ்விற்கு ஆற்றல் உண்டு. ஷைகு யஹ்யா முனீரி (ரஹ்) அவர்களுக்கு எதிராக பரலேவிகள் தீர்ப்பளிக்க தாயார் ? பரலேவிய

அறிஞர் سراج سالكين شمس العارفين حضرت سيد نور الحسن شاه صاحب அவரது நூலான இன்ஸான் பில் குர்ஆன் என்ற நூலில கூறுகிறார்கள் இந்த நபிமார்கள்,ரஸூல்மார்களின் சங்கிலித்தொடர் ஆரம்பத்திலிருந்து இறுதிவரையிலாகும். மேலும் உலகம் அதிலுள்ளவைகள் மட்டுமின்றி அனைத்து படைப்புகளை படைத்துள்ளான்.அதாவது அதைப் போன்ற கோடிக்கணக்கான லட்சக்கணக்கான எண்ணிக்கையிலே படைக்க முடியும் இவருக்கு எதிராக பரலேவிகள் தீர்ப்பளிக்க தயாரா? அல்லாமா அன்வர் ஷாஹ் காஷ்மீரி ரஹ் அவர்கள் குர்ஆனில் வார்த்தை ரீதியாக மாற்றம் நிகழ்ந்துள்ளது என்பதாக குற்றச்சாட்டும் தக்க மறுப்பு

அஹ்லுஸ்ஸுன்னாவைச் சார்ந்த எவரும் குர்ஆனிலே வார்த்தை ரீதியாக மாற்றம் நிகழ்ந்துள்ளது என சொல்லவில்லை.மாறாக அவ்வாறு கூறினால் அவர் இஸ்லாத்தை வெளியேறியராவார். முதலில் இந்த குற்றச்சாட்டிற்கு பதில் அளிப்பதற்கு முன்பு அன்வார்ஷாஹ் கஷ்மீரி (ரஹ்) அவர்கள் கூறியது என்ன அதனின் விளக்கத்தைப் பார்ப்போம்! அறிந்து கொள்ளவேண்டும்

முந்தைய வேதங்களிலே மாற்றம் நிகழ்ந்துள்ளது சம்பந்தமாக மூன்று சாராரர்கள் உள்ளனர். முதல் சாராரின் கருத்தின்படி முந்தைய வேதங்களில் மாற்றமானது எல்லாவிதங்களிலும் அரங்கேறியுள்ளது. வார்த்தை ரீதியாகவும் கருத்து ரீதியாகவும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. இந்த கருத்தின் பக்கம் இப்ன் ஹஸ்ம் (ரஹ்) அவர்கள் உள்ளார்கள். இரண்டாவது சாராரின் கருத்தின்படி முந்தைய வேதங்களில் வார்த்தை ரீதியாக மாற்றம் ஏற்பட்டுள்ளது எனினும் குறைவாக நிகழ்ந்துள்ளது. இப்னு தைய்மிய்யா (ரஹ்) அவர்களின் கருத்து இதுவாக இருக்ககூடும். மூன்றாவது சாராரின் கருத்துப்படி முந்தைய வேதங்களில் வார்த்தை ரீதியான மாற்றம் நிகழ்ந்ததை அறவே மறுக்கின்றனர். அவர்களிடத்தில் மாற்றமானது கருத்து ரீதியாக மட்டும்தான். நான் கூறுகிறேன் (அன்வர்ஷாஹ் காஷ்மீரி ரஹ்) இந்த சாராரின் கருத்துப்படி அவசியமாகிவிடும். (அல்லாஹ் பாதுகாப்பானாக!) குர்ஆனிலும் மாற்றம் நிகழ்ந்துள்ளது ஏனெனில் கருத்து ரீதியான

மாற்றமானது குர்ஆனிலும் குறைவின்றி நிகழ்ந்துள்ளது.

என்னிடத்தில் சரியான கருத்தானது முந்தைய வேதங்களில் வார்த்தை ரீதியாகவும் ,கருத்து ரீதியாவும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளது.அறிந்தே செய்துள்ளார்கள்.அல்லது தவறுதலாக நிகழ்ந்துள்ளது. அல்லாஹ்வே சரியாக அறிந்தவன்.(பைளுல் பாரி ) இனி இதனின் விளக்கத்தைப் பார்ப்போம்! இப்னு அப்பாஸ் (ரளி) கூற்றிலே வேதக்காரர்கள் அவர்களின் வேதங்களிலே மாற்றம் செய்துள்ளது அறியப்படுகிறது.அன்வர் ஷாஹ்கஷ்மீரி (ரஹ்) அவர்கள் இது சம்பந்தமாக மூன்று சாரார்களின் கருத்தை எடுத்துச் சொல்லியுள்ளார்கள். 1)வேதக்காரர்களின் வேதத்திலே மாற்றமானது அதிகமாக நடந்துள்ளது 2)மாற்றம் நிகழ்ந்துள்ளது எனினும் குறைவாக நடந்துள்ளது 3)வார்த்தை ரீதியாக மாற்றம் அறவே இல்லை கருத்து ரீதியாகதான் மட்டும்தான் நிகழ்ந்துள்ளது.இந்த மூன்று சாராரின் கருத்தை எடுத்து சொன்ன பிறகு தங்களின் ஆய்வை தெளிவுப்படுத்துகிறார்கள்.வேதக்காரர்களின்

வேதத்திலே வார்த்தை ரீதியான மாற்றம் நிகழ்ந்துள்ளது.இந்த மாற்றம் அவர்கள் அறிந்து செய்தார்களா அல்லது தவறுதலாக நிகழ்ந்துள்ளதா என்பதை அல்லாஹ்வே மிக அறிந்தவன்.இங்கு ஆய்வே வேதக்காரர்களின் வேதத்திலே மாற்றம் நிகழ்ந்துள்ளதா ? அல்லது இல்லையா ? நிகழ்ந்துள்ளது எனில் குறைவாகவா? அதிகமாகவா? இந்த விஷயத்திலே மூன்று சாராரின் நிலைப்பாட்டை நினைவூட்டினார்கள். இதிலே குர்ஆனில் வார்த்தை மாற்றம் ஏற்பட்டுள்ளது என்பதாக எங்கும் குறிப்பிடவில்லை.இதிலே ஷாஹ் அன்வர் ஷாஹ் கஷ்மீரி (ரஹ்) அவர்கள் கூறினார்கள் அதிலே வார்த்தை ரீதியான மாற்றம் நிகழ்ந்துள்ளது.அடுத்து மூன்றாவது சாராரின் சொல்லை எடுத்துக் காட்டியுள்ளார்கள்.அதாவது முந்தைய வேதங்களில் கருத்து ரீதியான மாற்றம் மட்டும் நிகழ்ந்துள்ளது. வார்த்தை ரீதியான மாற்றம் நிகழவில்லை.

ஹள்ரத் அன்வர் ஷாஹ் (ரஹ்) அவர்கள் இந்த கருத்தானது தவறானது என்பதை நிருவுகிறார்.ஒரு வாதத்திற்கு கருத்து ரீதியான மாற்றம் மட்டும் ஏற்பட்டுள்ளது

எனில் குர்ஆனிலும் மாற்றம் ஏற்பட்டுள்ளது என்பதாகிவிடும்.(அல்லாஹ் பாதுகாப்பானாக!) ஏனெனில் அதிலும் கருத்து ரீதியான மாற்றம் செய்வதில் எந்த ஒரு குறைவையும் விட்டுவைக்கவில்லை.இதன் மூலம் இருவிஷயங்கள் தெளிவாகிறது.ஒன்று குர்ஆனில் கருத்து ரீதியான மாற்றத்தை ஏற்பதுடன் மூன்றாவது சாரருக்கு ஒரு கேள்வியை முன்வைத்துள்ளார்கள். இதன் மூலம் குர்ஆனில் வார்த்தை ரீதியான மாற்றம் நிகழ்ந்துள்ளது என எவரும் சொல்லவில்லை. இரண்டாவது , ஒரு வாதத்திற்கு ஹள்ரத் அன்வர் ஷாஹ் காஷ்மீரி (ரஹ்) அவர்கள் குர்ஆனிலே வார்த்தை ரீதியான மாற்றமும் நிகழ்ந்ததுள்ளது என்பதை ஏற்றிருந்தால் (அல்லாஹ் பாதுகாப்பானாக!) மூன்றாவது சாராருக்கு மட்டும் பதிலளிக்காமல் முதல்,இரண்டாவது சாராருக்கும் இதே வாதத்தை நிருவியிருப்பார்கள். ஆக குர்ஆன் வார்த்தை ரீதியான மாற்றம் நிகழ்வதை விட்டும் பரிசுத்தமானது.இதனை எவரும் மறுக்கவில்லை.அன்னாரின் 'முஷ்கிலாதில் குர்ஆன்"என்ற நூலின் முன்னுரையை

படித்துப் பார்த்தால் தெளிவாக புரிந்து கொள்ளலாம்! அடுத்து அன்வர் ஷாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதை பார்ப்போம் و الذي تحقق عندي ان التحريف فيه لفظي ايضا اما انه عن عمد عنهم او لمغالطة فالله تعالى اعلم به

இந்த வாசகத்தின் கருத்தானது: என்னிடத்தில் சரியான கருத்தானது அதிலே வார்த்தை ரீதியான மாற்றம் நிகழ்ந்துள்ளது.அதனை வேண்டுமென்றே அல்லது தவறுதலாக நிகழ்ந்திருக்கலாம்.இந்த வாக்கியத்தில் فيها என்ற இடத்தில் فيه என்பதாக எழுதப்பட்டுவிட்டது. அசலான வாக்கியமானது

(ان التحريف فيها (اي الكتب السماوية كالتوراة و الانجيل و غيرهما

அதிலே மாற்றமானது அதாவது வானுலக வேதமான தவ்ராத் ,இன்ஜீல் மற்றும் அவை அல்லாதவைகளில் வார்த்தை ரீதியான மாற்றம் நிகழ்ந்துள்ளது. ஆக இங்கு அறவே குர்ஆனைப் பற்றி பேசவில்லை. குர்ஆனில் வார்த்தை ரீதியான மாற்றம் நிகழ்ந்ததாக கூறவில்லை என்பதற்கு மற்றொரு ஆதாரம் இதனின் தொடர்ச்சியில் வருகிறது விளக்கம் பின்வருமாறு والذي ينبغى فيه النظر ههنا இங்கு நன்றாக சிந்திக்க வேண்டிய விஷயம் انه كيف ساغ لابن عباس انكار التحريف اللفظي இப்னு அப்பாஸ் (ரளி) அவர்கள் வார்த்தை ரீதியான மாற்றம் ஏற்படவில்லை

என்ற சொல்லானது எந்த அடிப்படையிலாகும் ஏனெனில் சான்றுகள் அதற்கு எதிராக உள்ளது.முந்தைய வேதங்களில் வார்த்தை ரீதியான மாற்றம் நிகழ்ந்துள்ளது كيف و قد نعى عليهم القرآن انهم كانوا يكتبون بايديهم ثم يقولون هو عند الله و ما. هو من عند الله பிறகு வார்த்தைகளில் மாற்றம் ஏற்படவில்லை என்பதானது எப்படி சாத்தியமாகும் குர்ஆன் மாற்றம் செய்வதை கெட்ட செயல் என்கிறது.கையால் எழுதிக்கொண்டு இது அல்லாஹ்வின் புறத்திலிருந்து வந்துள்ளது என்கிறார்கள்.ஆனால் உண்மையில் அல்லாஹ்விடமிருந்து வரவில்லை.هل هذا الا تحريف لفظي و لعل مراده ما كانوا يحرفونها قصدا இதுதான் மாற்றமாகும்.பெரும்பாலும் வார்த்தை ரீதியான மாற்றமில்லை என்பதன் அர்த்தம் அவர்கள் இவ்வாறு நாட்டத்துடன் செய்யவில்லை ولكن سلفهم كانوا يكتبون مرادها كما فهموه ثم كان خلفهم يدخلون فى نفس التوراة فكان التفسير يخلط با لتوراة من هذا الطريق மாறாக மாற்றமானது அவர்களின் முன்னோர்கள் வேதங்களில் அவர்களின் சிந்தனைக்கு ஏற்ப விளக்கத்தை எழுதிவைத்துவிட்டனர். ஆனால் அவர்களுக்குப் பிறகு வந்தவர்கள் அவர்களின்

விளக்கத்தை தவ்ராதில் இணைத்து விட்டனர்.இதனால் அசலிலும் விளக்கத்திலும் குழப்பநிலை ஏற்பட்டுவிட்டது.இந்த முறையில்தான் வார்த்தை ரீதியான மாற்றம் நிகழ்ந்து விட்டது.

ஆக ஹள்ரத் அன்வர்ஷாஹ் கஷ்மீரி (ரஹ்) அவர்கள் குர்ஆனில் வார்த்தை ரீதியாக மாற்றம் நிகழும் என்பதாக ஒரு போதும் கூறவில்லை மாறாக பரலேவிகளின் பொய்யும் புரட்டும் நிறைந்த வாதமாகும்.

அனைத்து நபிமார்களும் , இறைத்தூதர்களும் பயனற்றவர்கள் (தக்வியதுல் ஈமான்) குற்றச்சாட்டும் தக்க மறுப்பும் : இந்த குற்றச்சாட்டானது ஷாஹ் இஸ்மாயில் ஷஹீத் (ரஹ்) அவர்கள் மீது பொய்யாக சுமத்தப்படுகிறது.ஷஹீத் (ரஹ்) அவர்களின் வாசகத்தை திரித்து ,புரட்டி சுயவிளக்கத்தை புகுத்தி விமர்சிக்கின்றனர். முதலில் பரலேவிகள் காட்டும் வாசகத்தையும் அதன் பிறகு தக்வியதுல் ஈமானில் உள்ள அசலான வாசக அமைப்பையும் பார்ப்போம்!

பரலேவிகள் காட்டும் வாசகம்: نبی اور رسول سب ناکارہ ہیں தக்வியதுல் ஈமானில் இருப்பதாக மேற்கோள் காட்டும் வாசகம் இதனின்

அசலான வாசகம் یعنی عزۃ و جلال والے خدا کے ہوتے ہوئے ایسے ناکارہ لوگوں کو پکارنا جو نہ نفع کے مالک ہیں اور نہ نقصان کے سراسر ظلم ہے بڑی سے بڑا ہستی کا مقام محض ناکارہ لوگوں کو دیا جارہا ہے இந்த வாசகத்தில் அறவே நபிமார்கள் என்பதாகவோ தூதர்கள் என்பதாகவோ இல்லை இதனின் மொழிபெயர்ப்பை பார்ப்போம்! அதாவது கண்ணியம் , கம்பீரம் மிக்க அல்லாஹ் இருப்பதுடன் தீங்கும் விளைவிக்க முடியாத , பயனளிக்க முடியாத பயனற்ற மக்களை அழைப்பதானது முற்றிலும் அநியாயமாகும்.மிகவும் மேன்மைமிக்க மிகப்பெரிய நபருக்கு உள்ள அந்தஸ்து,தகுதியை பயனற்ற மக்களுக்கு கொடுக்கப்படுகிறது.ஷாஹ் இஸ்மாயில் ஷஹீத் (ரஹ்) அவர்கள் الاشراک فی التصرف அல்லாஹ்வின் ஆற்றலில் இணைவைத்தல் என்ற தலைப்பில் குர்ஆனின் திருவசனங்கள் ஹதீஸ்களை மேற்கோள் காட்டி அதனின் தீமையிலிருந்து தவிர்ந்து கொள்ளும் படி அறிவுறுத்துகிறார்கள்.

"எல்லாப் பொருட்களின் ஆட்சியும் யார் கையில் இருக்கிறது? யார் எல்லாவற்றையும் பாதுகாப்பவனாக- ஆனால் அவனுக்கு எதிராக எவரும் பாதுகாக்கப்பட முடியாதே அவன்

யார்? நீங்கள் அறிவீர்களாயின் என்று கேட்பீராக. சூரா (முஃமினூனில் 88 வசனம்) "எவனிடத்தில் சக்தி ,விருப்பம்,நாடியதை செய்தல்,அவனின் கையை பிடிக்க முடியாமல் இருப்பது,அவனின் பேச்சை தள்ளிப் போட முடியாமல் இருப்பது இந்த தகுதி யாருக்கு உள்ளது? என இணைவைப்பாளரிடத்தில் வினவப்பட்டால்,அவர்கள் கூறுவார்கள் அல்லாஹ் என்பதாக.அதே சமயத்தில் மற்றவர்களிடத்தில் அவர்களின் விருப்பங்களை, தேவைகளை வேண்டி (பிரார்த்தி) மடையனாகி விடுகிறான்.நாம் அறிய முடிகிறது.நபி (ஸல்) அவர்கள் காலத்தில் கூட (இணைவைப்பாளர்கள்) மக்கள் இவ்வாறு சொல்வார்கள் அல்லாஹ்விற்கு சமமாக,எதிரில் எவருமில்லைஎன்று ஆனால் சிலைகளை அவர்களின் வக்கீலாக கருதி அவைகளிடத்தில் வேண்டிக் கொண்டிருந்தார்கள். இதனால் தான் இணைவைப்பாளர்களாக ஆகிவிட்டனர்.இன்றும் கூட அல்லாஹ்விற்கு எதிரில் ஆற்றல் இல்லையென்றும் சரிசமமாக இல்லையென்றும் விளங்கியிருந்த போதிலும் எவரேனும், படைப்புகளுக்கு ஆற்றல் உண்டு

வக்கீல் என்பதாக எண்ணி வணங்கினால் அவர் முஷ்ரிக்தான்.அடுத்து ஒரு வசனத்திற்குப் பிறகு சூரா நஹ்ல் 63 வது வசனத்தை ஷஹீத் (ரஹ்) அவர்கள் மேற்கோள் காட்டுகிறார்கள் வானங்களிலோ பூமியிலோ இவர்களுக்காக எந்த உணவையும் கைவசத்தில் வைத்திருக்காதவைகளையும் அதற்கு சக்தி பெறாதவைகளையும் அல்லாஹ்வை விட்டுவிட்டு இவர்கள் வணங்குகிறார்கள். இந்த வசனத்திற்கு விளக்கம் ஷஹீத் (ரஹ்) கொடுக்கிறார்கள் یعنی ایسے لوگوں کی اللہ کی سی تعظیم کرتے ہیں جو قطعی بے بس ہیں உண்மையிலேயே ஒன்றுமில்லாத மக்களுக்கு அல்லாஹ்விற்கு செய்கிற கண்ணியம் செய்கின்றார்கள். ஆக இங்கும் கூட நபிமார்களைப் பற்றி அறவே பேசவில்லை எனவே தக்வியதுல் ஈமானில் உள்ள குற்றச்சாட்டானது முற்றிலும் புனையப்பட்டது என்பதை புரிந்துகொள்ளலாம்.

அடுத்து ( ناکارہ )பயனற்ற ( بے بس )மதிப்பில்லாத என்ற வார்த்தையானது பொதுவாக வந்திருப்பதன் மூலம் நபிமார்கள் உள்ளடங்குவார்களா? பதில்:பொதுவாக வந்திருப்பதை குறிப்பாக்குவதற்கு ஆதாரம்

தேவை இந்த அடிப்படையை பரலேவிகளும் ஏற்கிறார்கள். பிரபல்யமான அறிஞர் அஷ்ரப் ஸய்யாலு கூறுகிறார்: ایک ہے عمومی طور پر مخلوق کو ذلیل کہنا اور ایک خاص طور کسی شخصیت کا نام لے کر اسے ذلیل کہنا تو عموم اور تخصیص کی اندر فرق واضح ہے கருத்து: பொதுவாக சொல்வதற்கும், குறிப்பிட்டு சொல்வதற்கும் மத்தியில் மிகப்பெரிய வேறுபாடு வித்தியாசம் உள்ளது.

படைப்புகளில் மேலானவர்களான நபிமார்களும் ,கீழான பிற படைப்புகளும் ,எல்லாரும் இல்ம் என்னும் அறிவற்றவர்களாகவும் அறியாமையிலும் இருக்கிறார்கள் ." (அஸ்தக்பிருல்லாஹ் ) [நூல் - தக்வியத்துல் ஈமான் ,பக்கம் 3] குற்றச்சாட்டும் தக்க மறுப்பு :

வழக்கம் போல் பரலேவிகள் இந்த குற்றச்சாட்டும் ஷாஹ் இஸ்மாயில் ஷஹீத் (ரஹ்) அவர்கள் மீது புனைந்து கூறியுள்ளனர். தக்வியதுல் ஈமானில் உள்ள வாசகத்திற்கும் மேலே உள்ள பரலேவிகளின் மொழிபெயர்ப்பிற்கும் அறவே சம்பந்தமில்லை.தக்வியதுல் ஈமானில் உள்ள அசலான வாசகம் کہ ان باتوں میں سب بندے بڑے ہوں یا چھوٹے

سب یکساں بے خبر ہیں اور نادان படைப்புகளில் பெரியவர்களும், படைப்புகளில் சிறியவர்களும் அனைவரும் மறைவான ஞானங்களில் அறியாதவர்களும் தெரியாதவர்களாகவும் இருக்கிறார்கள்.ஆக இங்கு "நபிமார்கள்" என்ற வாசகமும் "இல்ம்" என்ற வாசகமும் அறவே இல்லை. அதற்குப் பிறகு ஷஹீத் (ரஹ்) தெளிவாக குறிப்பிட்டுள்ளார்கள் ہاں مگر جو اللہ کی طرف سے وحی یا الہام ہو اس کی بات نرالی مگر وہ ان کے اختیار میں نہیں ஆனாலும் அல்லாஹ்வின் புறத்திலிருந்து அல்லது எண்ண உதிப்பிலிருந்து எதையேனும் கூறும் விஷயமானது தனித்து விளங்கக் கூடியது.ஆனால் அவை அவர்களின் விருப்பத்தின் பேரில் இல்லை. ஆக இந்த வாசகங்களின் மூலம் நபிமார்களை ஷஹீத் (ரஹ்) அவர்கள் குறிப்பிடவில்லை என்பதாக தெளிவாக புரியலாம்.